# இரு சகோதரிகள்

**ரவீந்திரநாத் டாகுர்**

**த. நா. குமாரஸ்வாமி**
*மொழிபெயர்த்தது*

இந்தக் கதை இரண்டு சகோதரிகளின் மனப்பாங்கை மிகவும் ஆச்சரியந்தரு முறையில் வெளிப்படுத்துகிறது. கடமையைப் பெரிதாகக் கருதும் ஒரு பத்தினியும், குருட்டாம்போக்காக உணர்ச்சிக்கு மாறாகக் கொள்கைகளை வகிக்கும் ஓர் இளம் பெண்ணும் ஓர் ஆடவனை நடுவில் வைத்து இந்தக் கதையில் உலவுகிறார்கள். ரவீந்திரர் தம் ஆற்றலை இதன்கண் நன்றாக வெளிப்படுத்தியிருக்கிறார். மனோவிஞ்ஞானத்தை ஆதாரமாகக் கொண்ட மிகவும் அழகிய நாவல்.

விலை ரூ. 1—0—0

---

மானேஜர் - கலைமகள் - மயிலாப்பூர்

# முதற் காதல்

*

ருஷிய ஆசிரியர்

**ஐவான் டர்ஜனீவ்**

எழுதியது

**‘இலங்கையர்கோன்’**

மொழிபெயர்ப்பு




கலைமகள் காரியாலயம்,
மயிலாப்பூர், சென்னை.



[விலை அணா 10

# முன்னுரை

காதலென்னும் உணர்ச்சியைப் புலவர்களும் எழுத்தாளர்களும் படுத்திவைத்திருக்கும் பாடு சொல்லத்தரமன்று. கவிதையிலும் கதையிலும் காதலின் விசித்திர விளையாட்டுக்களை முக்கியமாக வைத்துக்கொண்டு மேலே வர்ண விஸ்தாரங்களால் புஷ்டிப்படுத்தி அமைப்பதே அறிவாளிகளின் தொழிலாகிவிட்டது. ஆயினும் அது பழமை அடையவில்லை; புதிய பொருளாகவே, நித்திய யௌவனத்தோடு புலவர்களுடைய இலக்கிய சிருஷ்டியிலே பரிமளித்துக்கொண்டு நிற்கிறது. ஆங்கிலக்கவிஞன் தன் நாட்டுக்கேற்ற போக்கிலே காதற்கதையைப் புனைந்து மகிழ்விக்கிறான்; தமிழ்க்கவிஞன் தன் நாட்டுக் களவுக்காதலைக் காவியஞ் செய்கிறான். இப்படியே காலத்தாலும் இடத்தாலும் காதலின் விசித்திரப் போக்குகள் பல பலவாக விரிந்து மலர்கின்றன. இந்த 'முதற் காதல்' அந்த விசித்திர வகைகளிலே ஒன்று.

ஸிநைடாவைப் பலர் காதலிக்கிறார்கள். ஒரு பிரபு, ஒரு கவிஞன், ஒரு குமரன், அவனுடைய தந்தை பெட்ரோவிச் யாவருக்கும் அவள் காதற் பொருளாக இருந்தாலும் அவள் நெஞ்சம் பெட்ரோவிச்சினிடம் தளைப்பட்டு விடுகிறது. தேவரகசியமாக இருக்கிறது அது. மற்றவர்கள் அவள் விழியொளியிலே சொக்கி நிற்கின்றனர். அவர்களை அவள் ஆட்டிவைத்து வேலை வாங்குகிறாள்; அலட்சியமாக நடத்துகிறாள். ஆனாலும் அவர்கள் அவள் பாதத்தில் விழுகின்றனர். இவையெல்லாம் காதலால்

நிகழ்வனவாக அந்தப் பேதையர் எண்ணி மகிழ்கின்றனர்! ஆனல் அவள் உள்ளமோ மறைவிலே பெட்ரோவிச்சின் அடியிலே கிடக்கின்றது.

கதை சொல்லும் விலாட்மீர் தான் காதலிக்கும் 'முதற் காதலி' தன் தந்தையைக் காதலிக்கும் அற்புதத்தைக் கண்டு வியப்படைகிருன். அவன் தந்தை அவளை அடக்கி ஆளுகிருர், சவுக்கினுல் அடிக்கிருர். அவள் அடிபட்டு ரத்தம் வழியும் கையை முத்தமிட்டுக்கொள்ளுகிருள். அப்போது தான் காதலின் உண்மையாற்றலை விலாட்மீர் அறிந்து வியக்கிருன். 'உண்மையான அன்பு உண்டானுல் எதையும் சகித்துக்கொள்ளலாம் போலும்!' என்று எண்ணுகிருன். அந்த மகத்தான காதலின் முன் தன் காதல் குழந்தை விளையாட்டுப்போல் இருப்பதை உணர்கிருன்.

வினைடாவின் காதல் நிறைவேறவில்லை. பெட்ரோவிச் அவளை மணக்கமுடியவில்லை. அவர் இறந்து போகிருர். வினைடா யாரையோ பேருக்கு மணம் புரிந்துகொண்டு பிராணனை விடுகிருள். 'ஒருவேளை தன் மரணத்திலும் என் தகப்பனுரைத் தேடினுளோ? அவரை விட்டு அவளால் இக்கொடிய வாழ்வைத் தனியே சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை போலும்?' என்று விலாட்மீர் சொல்லி உருகுகிருன். அவன் காதல் பக்தியாக மாறிவிடுகிறது.

ருஷ்யா தேசத்துப் பிரபல ஆசிரியராகிய டர்ஜனீவ் எழுதிய இந்தச் சிறுகதையை 'இலங்கையர்கோன்' தெளிந்த இனிய நடையிலே மொழி பெயர்த்து உதவியிருக்கிருர். அவருக்கு எங்கள் நன்றி உரியது.

பதிப்பாளர்.

# முன்னுரை

**கா**தலென்னும் உணர்ச்சியைப் புலவர்களும் எழுத்தாளர்களும் படுத்திவைத்திருக்கும் பாடு சொல்லத்தரமன்று. கவிதையிலும் கதையிலும் காதலின் விசித்திர விளையாட்டுக்களை முக்கியமாக வைத்துக்கொண்டு மேலே வர்ண விஸ்தாரங்களால் புஷ்டிப்படுத்தி அமைப்பதே அறிவாளிகளின் தொழிலாகிவிட்டது. ஆயினும் அது பழமை அடையவில்லை; புதிய பொருளாகவே, நித்திய யௌவனத்தோடு புலவர்களுடைய இலக்கிய சிருஷ்டியிலே பரிமளித்துக்கொண்டு நிற்கிறது. ஆங்கிலக்கவிஞன் தன் நாட்டுக்கேற்ற போக்கிலே காதற்கதையைப் புனைந்து மகிழ்விக்கிறான்; தமிழ்க்கவிஞன் தன் நாட்டுக் களவுக்காதலைக் காவியஞ் செய்கிறான். இப்படியே காலத்தாலும் இடத்தாலும் காதலின் விசித்திரப் போக்குகள் பல பலவாக விரிந்து மலர்கின்றன. இந்த 'முதற் காதல்' அந்த விசித்திர வகைகளிலே ஒன்று.

ஸினைடாவைப் பலர் காதலிக்கிறார்கள். ஒரு பிரபு, ஒரு கவிஞன், ஒரு குமரன், அவனுடைய தந்தை பெட்ரோவிச் யாவருக்கும் அவள் காதற் பொருளாக இருந்தாலும் அவள் நெஞ்சம் பெட்ரோவிச்சினிடம் தளைப்பட்டு விடுகிறது. தேவரகசியமாக இருக்கிறது அது. மற்றவர்கள் அவள் விழியொளியிலே சொக்கி நிற்கின்றனர். அவர்களை அவள் ஆட்டிவைத்து வேலை வாங்குகிறாள்; அலட்சியமாக நடத்துகிறாள். ஆனாலும் அவர்கள் அவள் பாதத்தில் விழுகின்றனர். இவையெல்லாம் காதலால்

போன பிறகு என் சுதந்திரத்தைக் கட்டுப்பாடு செய்ய எவரும் முயலவில்லை. அப்பா என்னைச் சிரத்தை இல்லாத ஒருவிதமான அன்போடு நடத்தி வந்தார். நான் ஒரே பிள்ளையாக இருந்தும் அம்மா என்மேல் அவ்வளவு அக்கறை கொள்ளவில்லை. அவளுக்கு வேறு தொல்லைகள் நிறைய இருந்தன.

அப்பாவுக்கு நாற்பத்திரண்டு வயது. ஆனால் அவருடைய அழகும் பலமும் அப்படியே இருந்தன. அம்மா அவரிலும் பத்து வயது மூத்தவள். காதல் என்பது இல்லாமல், வெறும் பணத்திற்காகவே அப்பா அவளை விவாகம் செய்துகொண்டார். அதனால் அம்மாவின் வாழ்க்கை கவலை நிறைந்ததாக இருந்தது. சதா கலவரம் அடைந்தவளாகவும், கோபம் பொறாமை முதலியன கொண்டவளாகவும் காணப்பட்டாள். ஆனால் இந்த உணர்ச்சிகளில் ஒன்றையும் அவள் என் தகப்பனார் முன்னிலையில் காட்டிக் கொள்வதில்லை. அவருக்கு அவளைப் பற்றிப் பயம். அவர் எந்நேரமும் பராமுகமாகவும், கடினசித்தம் உடையவராகவும் நடந்துகொண்டார். சுருங்கச் சொன்னால், என் தகப்பனாரைப் போன்ற தன்னம்பிக்கை நிறைந்த, அமைதியான, அதிகார தோரணை கொண்ட மனிதரை நான் இதுகாறும் கண்டதில்லை.

அந்த வீட்டில் வாசம் செய்ய ஆரம்பித்த முதல் இரண்டு வாரங்களையும் என்னால் ஒரு பொழுதும் மறக்கமுடியாது. பகல் வேளைகளில் நான் ஒரு புஸ்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு எங்கள்

வீட்டிற்கு அருகில் இருந்த பூந்தோட்டத்திலும், அதற்கு முன்னால் இருந்த செஸ்குச்னித் தோட்டத்திலும் உலாவித் திரிவதுண்டு. புஸ்தகம் சும்மா என் கையில் தூங்கிக்கொண்டு இருக்கும். நான் அதைத் திறந்து பார்ப்பதுகூட இல்லை. சில வேளைகளில் எனக்குத் தெரிந்த பாட்டுக்கள் சிலவற்றை உரக்கப் பாடுவேன்.

எனக்கு எத்தனையோ பாடல்கள் மனப்பாடமாய்த் தெரிந்திருந்தன......என் ரத்தம் குமுறிக் கொண்டிருந்தது; என் மனம் எதையோ குறித்துச் சதா ஏங்கிக்கொண்டிருந்தது. ஆ! அந்த ஏக்கத்தில் தான் எவ்வளவு இனிமை, எவ்வளவு பைத்தியக் காரத்தனம்! நான் எதையோ குறித்துப் பயப்படுவது போலவும், எதையோ குறித்து ஆச்சரியப்படுவது போலவும் இருந்தேன். என் உள்ளம் எந்நேரமும் எதையோ எதிர்பார்த்துத் தவித்துக் கொண்டிருந்தது. விளக்கைச் சுற்றிச் சுற்றி வட்டமிடும் விட்டில் பூச்சிகளைப் போல என் சிந்தனைகளும் ஏதோ ஓர் இனிமையான எண்ணத்தைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அர்த்தமற்ற பகற் கனவுகளும் துயரம் நிறைந்த யோசனைகளும் என்னை வதை செய்தன. சில வேளைகளில் நான் கண்ணீர் விட்டு அழுததும் உண்டு. ஆனால் இடையிடையே, ஓர் இசை கலந்த பாட்டைக் கேட்டவுடனே, மாலை வேளையின் அற்புதமான அழகுக் காட்சி ஒன்றைக் கண்டவுடனே பொங்கும் இளமையும், உயிர் வாழ்வின் மேல் உள்ள மோகமும்

என் துயரத்தையும் கண்ணீரையும் மீறிக்கொண்டு தலைகாட்டின.

என்னிடம் ஒரு குதிரை இருந்தது. அதன் மேல் ஏறிக்கொண்டு சில வேளைகளில் நான் நெடு நேரம் உல்லாசமாகச் சவாரி செய்வதுண்டு. அச் சமயங்களில் என்னை ஒரு போர்வீரனைகப் பாவித்துக் கொண்டு புளகாங்கிதம் அடைவேன். காற்று மனோகரமாக என் காதுகளில் உராய்ந்துகொண்டு செல்லும். அகன்ற ஆகாயத்தை அண்ணாந்து பார்ப்பேன்; அதன் பரந்த நிறத்தையும் பிரகாசத் தையும் என் உள்ளம் அப்படியே மலர்ந்து கிரகித் துக்கொள்ளும்.

அந்தக் காலத்தில் பெண்ணின் சாயலோ அல்லது காதல் என்ற உணர்ச்சியின் சுவையோ என் மூளையில் பூரண வடிவு பெற்றுத் தோன்றவில்லை. ஆனால் பெண்மை தோய்ந்த, நாணம் கலந்த, மதுர மான, புதுமை நிறைந்த ஏதோ ஓர் ஆவல், ஒரு முன்னறிவிப்பு அரை குறையாக என் நினைவுகளி லும் உணர்ச்சிகளிலும் தேங்கி மறைந்து கிடந்தது. இந்த ஆவல், இந்த முன்னறிவிப்பு, என் ஒவ் வொரு சுவாசத்திலும், என் நரம்புகளில் தெறித் தோடும் ஒவ்வொரு துளி ரத்தத்திலும் கலந்து என்னை முற்றும் விழுங்கி இருந்தது. அந்த ஆவல் முற்றுப் பெறவேண்டிய தினமும் சமீபித்தது.

நாங்கள் குடியிருந்த வீட்டிற்கு அருகில் வேறு இரண்டு சிறிய வீடுகள் இருந்தன. அவைகளில், இடது பக்கத்து வீடு கடுதாசி உற்பத்தி செய்யும்

பந்திரசாலையாக உபயோகப்பட்டு வந்தது; வலது பக்கத்து வீடு காலியாக இருந்தது. நாங்கள் குடி வந்து மூன்று வாரங்களுக்குப் பிறகு ஒரு நாள், அந்த வலது பக்கத்து வீட்டின் ஜன்னல்கள் திறந்தன; யாரோ பெண்கள் உள்ளிருந்து எட்டிப் பார்த்தார்கள். ஆமாம். அந்த வீட்டிற்கு யாரோ புதுக் குடித்தனம் வந்திருந்தார்கள்.

அன்றிரவு சாப்பிடும்பொழுது அம்மா, "அந்த வீட்டிற்குக் குடிவந்திருப்பவர்கள் யார்?" என்று எங்கள் பெரிய வேலைக்காரனிடம் கேட்டாள். அதற்கு அவன் கூறிய பதிலைக் கேட்டுவிட்டு, "ஆ, ஸாஸியேக்கின் சீமாட்டியா, அவளுடைய பெயர்? யாரோ வறிய சீமாட்டியாக்கும்!" என்றாள்.

"அவர்கள் வாடகை வண்டி வைத்துக்கொண்டு வந்தார்கள். அவர்களிடம் சொந்த வண்டி இல்லை. அவர்கள் கொண்டு வந்த வீட்டுப் பண்டங்களும் மிகக் கீழ்த்தரமானவை" என்றான் பெரிய வேலைக்காரன்.

"ஆகா, அதுவும் நல்லதுதான்" என்றாள் அம்மா. அப்பா அவளை எரித்துவிடுவது போல் ஒரு பார்வை பார்த்தார். அம்மா வாயை மூடிக்கொண்டு மௌனமாகி விட்டாள்.

ஆமாம், ஸாஸியெக்கின் சீமாட்டி பணக்காரியாக இருக்கமுடியாது. ஏன் என்றால், அவர்கள் வீடு தாழ்ந்த கூரை உடையதாகவும், பழுதடைந்ததாகவும் இருந்தது. சாதாரணமான நிலைமையில்

இருப்பவர்கள்கூட அப்படியான ஒரு வீட்டில் குடியிருக்க ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

அச்சமயம் நான் அவர்களைப்பற்றி அதிகச் சிரத்தை கொள்ளவில்லை. அந்தச் செய்தியை ஒரு காதால் கேட்டு மறு காதால் வெளியே விட்டுவிட்டேன். அவர்களுடைய 'சீமாட்டி'ப்பதவிகூட என்னை வசீகரிக்கவில்லை.

# அத்தியாயம் 2

எங்கள் தோட்டத்தில் பல காகங்கள் கூடு கட்டி இருந்தன. அவை கரைந்த குரல் சகிக்க முடியாமல் இருந்தது. அதனால் நான் ஒவ்வொரு மாலையிலும் அவைகளை விரட்டுவதற்கு என் துப்பாக்கியையும் எடுத்துக்கொண்டு தோட்டத்தில் உலாவி வருவது வழக்கம். அன்றும் வழக்கம் போல் உலாவி வரும்பொழுது எங்கள் வீட்டுத் தோட்டத் திற்கும் அடுத்த வீட்டுத் தோட்டத்திற்கும் இடையில் உள்ள தாழ்ந்த வேலியருகில் வந்ததும் யாரோ பேசும் குரல் கேட்டது. நிலத்தில் பதிந் திருந்த என் கண்களை அடுத்தவீட்டுத் தோட்டப் பக்கமாகத் திருப்பினேன். ஆ ! என்ன ஆச்சரியம்! எனக்குச் சிறிது தூரத்தில் பூஞ்செடிகளுக்கிடையில் பூங்கொடிபோல் ஒல்கிய உருவத்தோடு ஒரு பெண் நின்றுகொண்டிருந்தாள். அவள் கோடிட்ட ஒரு ரோஜா வர்ண நெட்டங்கியையும், தலையில் ஒரு வெண்பட்டு லேஞ்சியையும் அணிந்திருந்தாள். அவளைச்சுற்றி நான்கு ஆடவர்கள் நின்றுகொண் டிருந்தார்கள்.

அந்தப் பெண் அவர்கள் ஒவ்வொருவருடைய நெற்றியிலும் ஏதோ ஒரு பூவினால் "பட் பட்" என்று அடித்துக்கொண்டிருந்தாள். அந்தப் பூவின் பெயர்

எனக்கு மறந்து போய்விட்டது. சிறு பிள்ளைகளுக்குத்தான் அது தெரியும். அந்தப் பூவை ஏதாவது ஒரு கடினமான பொருளின்மேல் அடித்தால் அது "பட்" என்று வெடித்துத் திறந்துகொள்ளும். அப்படி அந்தப் பெண் அடித்தபொழுது, அவளுடைய ஒவ்வோர் அங்க அசைவிலும் முகச் சாயலிலும் பழிப்பும், துடுக்கும், பரிவும் நிறைந்த ஏதோ ஒரு கவர்ச்சி இருப்பதுபோல் எனக்குப் பட்டது. அவளுடைய அழகைக் கண்டு நான் அப்படியே பிரமித்துப் போய்விட்டேன். என் பிரமிப்பில் அப்படியே வாய்விட்டுக் கூவிவிடுவேன் போல் தோன்றியது. அந்த அழகிய காந்தள் விரல்கள் என் நெற்றியிலும் ஒருதரம் படுவதற்கு உலகில் எதை வேண்டுமானாலும் கொடுத்துவிட நான் சித்தமாயிருந்தேன். என்னை அறியாமல் என் கையில் இருந்த துப்பாக்கியும் நழுவிக் கீழே விழுந்துவிட்டது. என் கண்கள் இரண்டினாலும் அந்தத் தெய்வமோகினியை விழுங்கி விடுபவன்போல் மெய்ம்மறந்து பார்த்துக்கொண்டு நின்றேன். மென்மையான காற்றில் துவளும் பூங்கொடிபோன்ற மேனி, அழகிய கழுத்து, கைகள், வெள்ளை லேஞ்சியின் கீழ் ஒழுங்கின்றிப் புரளும் தலைமயிர், பாதி மூடப்பட்டிருந்த அகன்ற கண்கள், அவற்றின்மேல் வில்வளைத்து நிற்கும் கரிய புருவங்கள், மென்மையான சிவந்த கன்னங்கள்.........

"யாரையா நீ? முன் பின் அறியாத இளம் பெண்களைப் பார்த்து இப்படி விழியைப் புரட்டிக்

கொண்டு நிற்கிறாயே!" என்று ஓர் ஆண்குரல் கேட்டது.

நான் திடுக்கிட்டு விட்டேன். வேலியருகில் ஒரு மனிதன்—அந்தப் பெண்ணைச் சுற்றிக்கொண்டு நின்ற நால்வருள் ஒருவன்—என்னை ஏளனம் செய்வதுபோல் பார்த்துக்கொண்டு நின்றான். அந்தக் கணத்தில் அந்தப் பெண்ணும் என் பக்கமாகத் திரும்பினாள். தேசு விளையாடும் ஒரு முகத்தில் இரண்டு பெரிய கண்கள்; திடீரென்று அவளுடைய முகம் சலனம் அடைந்து சிரித்தது. வெண்பற்கள் மின்னின. புருவங்கள் மேலெழுந்தன. நான் முகம் சிவக்க, என் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு என் அறையை நோக்கி ஓடினேன்; இனிமையான சிரிப்பொலி என்னைத் தொடர்ந்து வருவதுபோல் தெரிந்தது. என் அறையை அடைந்ததும் என் முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு கட்டிலில் குப்புறப் படுத்தேன். என் இருதயம் வேகமாக அடித்துக்கொண்டிருந்தது. சங்கோசமும் சந்தோஷமும் மாறி மாறி என் மனத்தில் தோன்றின. நான் முன் ஒரு பொழுதும் உணர்ந்தறியாத ஒரு கிளர்ச்சி என்னைக் கௌவிக்கொண்டது.

சிறிது நேரம் கழித்து முகம் கழுவி, தலை வாரிக் கொண்டு தேநீர் அருந்துவதற்காகக் கீழ்மாடிக்குச் சென்றேன். அந்த இளம் பெண்ணின் உருவம் அப்பொழுதும் என் கண்களின் முன் ஆடிக் கொண்டிருந்தது. என் இருதயம் மட்டும் முன் போல் வேகமாக அடித்துக் கொண்டிருக்கவில்லை.

ஏதோ இனிமையான ஒரு சிந்தனை என் உள்ளத்தை வருத்திக்கொண்டிருந்தது.

"என்ன சமாசாரம்? காக்கா ஏதாவது அகப் பட்டதா?" என்று என் தகப்பனார் என்னைக் கேட்டார்.

அவருக்கு எல்லாவற்றையும் கூறிவிடவேண்டு மென்று எனக்கு ஆவலாக இருந்தது. ஆனால் என் ஆவலை அடக்கிக்கொண்டு ஒன்றும் பேசாமல் என் பாட்டில் புன்னகை செய்துகொண்டிருந்தேன்.

அன்றிரவு என் படுக்கையில் ஏறிப் படுப்பதற்கு முன், ஒற்றைக்காலில் நின்றுகொண்டு மூன்றுதரம் "ஆச்சி பூச்சி" ஆடினேன். எனக்கு அவ்வளவு சந்தோஷம்! பிறகு என் தலைக்கு வாசனை மெழுகு போட்டுக் கொண்டு, படுத்து நிம்மதியாகத் தூங்கினேன். வைகறையில் கண்விழித்து, என் தலையை நிமிர்த்தி ஒருதரம் பரமானந்தத்தோடு சுற்று முற்றும் பார்த்தேன். மறுபடியும் அப்படியே படுத்துத் தூங்கினேன்.

# அத்தியாயம் 3

**கா**லையில் நித்திரையை விட்டு எழுந்ததும் 'அவளுடைய பழக்கத்தை எப்படிச் சம்பாதிக்கலாம்?' என்பதுதான் என் முதல் யோசனையாக இருந்தது. தேநீர் அருந்திய பிறகு, நான் ஸாவியெக்கின் சீமாட்டியின் வீட்டிற்கு முன்னால் இருந்த பாட்டையில் குறுக்கும் நெடுக்குமாக நெடுநேரம் உலாவிக் கொண்டிருந்தேன். அவர்களுடைய ஜன்னல்களைத் தொலைவில் நின்றபடி அடிக்கடி உற்று நோக்கினேன். ஒரு தரம் அப்படி நோக்கும் பொழுது, முதல் நாள் மாலையில் நான் கண்ட பெண்ணின் முகம் ஜன்னலில் தெரிவதுபோல் மனப் பிராந்தி அடைந்து, திடுக்கிட்டுக் கலவரத்துடன் அவ்விடத்தை விட்டு அகன்றேன்.

எப்படியும் அவளது பழக்கம் செய்துகொள்ள வேண்டும். எப்படியும்......ஆனால் எப்படி? நேற்று மாலையில் அவள் என்னைக் கண்டு சிரித்த காட்சி அப்படியே என் மனக்கண்முன் எழுந்தது. 'அவளைப் பழக்கம் செய்துகொள்ளும் வழி என்ன?' என்று நான் என் தலையை உடைத்துக்கொண்டிருக்கும் சமயத்தில் என் நல்லூழே குறுக்கிட்டு, என் ஆசையைப் பூர்த்தி செய்வதற்கேற்ற ஒரு வழியை உண்டுபண்ணியது.

ஸாவலியெக்கின் சீமாட்டி அன்று காலையில் அம்மாவுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள். அழுக் கடைந்த காகிதத்தில் அலங்கோலமான எழுத்துக் களில் எழுதப்பட்டிருந்தது அக்கடிதம். அதில், தான் அம்மாவை வந்து பார்க்க விரும்புவதாகவும், அம்மாவிற்குச் செளகரியமான நேரம் எது என்றும் கேட்டிருந்தாள். அம்மாவிற்கு என்ன செய்வ தென்றே தெரியவில்லை. அப்பாவைக் கேட்கலா மென்றால் அவரும் அச்சமயம் வீட்டில் இல்லை. ஒரு 'சீமாட்டி'யின் கடிதத்திற்குப் பதில் எழுதாமல் இருப்பதென்றால், அது உசிதமன்று. எப்படியும் எழுதித்தான் ஆகவேண்டும். ஆனால் எப்படி எழுதுவது என்பதுதான் அம்மாவிற்குக் கவலையாக இருந்தது. பிரெஞ்சுப் பாஷையில் எழுதுவது அவ் வளவு நன்றாகத் தோற்றவில்லை. ருஷிய பாஷை யில் எழுதுவதென்றால் அம்மாவுக்கு ருஷிய பாஷை இலக்கண அறிவு கொஞ்சம் மட்டந்தான்.

இந்த நிலைமையில் என்னைக் கண்டதும், அம்மாவுக்கு ஒரு பெரிய பாரம் தலையிலிருந்து இறங்கியதுபோல் இருந்தது. கடிதம் எழுதாமல் என்னையே நேரில் ஸாவலியெக்கின் சீமாட்டியிடம் அனுப்பத் தீர்மானித்தாள். மறுநாள் மத்தியான்னம் ஒரு மணிக்கு வந்தால் தனக்குச் செளகரியப்படும் என்று அவர்களிடம் கூறிவிட்டு வரும்படி என்னை ஏவினாள்.

என் சந்தோஷத்திற்கு அளவே இல்லை. தேடிப் போன மருந்துக் கொடி......! என் சந்தோஷத்தை

வெளியிற் காட்டிக்கொள்ளாமல், விரைவாக என் அறைக்குச் சென்று, நான் வழக்கமாக அணிந்து கொள்ளும் கோட்டு நிஜார் முதலியவற்றைக் களைந்து விட்டு, நாகரிகமான நெக்டை, நீளமான கோட்டு முதலியவற்றை அணிந்து, தலைக்கு வாசனை மெழுகு பூசித் தலையை வாரிக்கொண்டு, ஸாவலியெக்கின் சீமாட்டி வீட்டை நோக்கிப் புறப்பட்டேன்.

# அத்தியாயம் 4

சீமாட்டியின் வேலைக்காரன் என்னை அவள் உட்கார்ந்திருந்த அறையில் கூட்டிக்கொண்டு போய் விட்டான். அந்த அறையில் அங்கங்கே ஒவ்வொரு மூலையில் சிதறிக்கிடந்த உடைந்த நாற்காலி மேஜை முதலியன அவர்களுடைய ஏழைமை நிலையை எடுத்துக் காட்டின. ஜன்னல் அருகில் கை ஒடிந்த நாற்காலி ஒன்றில் ஸாவியெக்கின் சீமாட்டி உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு வயது ஐம்பது இருக்கும். அவளுடைய முகம் விகாரமாக இருந்தது. அவள் அணிந்திருந்த உடையும் அப்படியே. அவளுடைய சிறிய விழிகள் என்னைக் கூர்மையாக உற்றுப் பார்த்தன.

நான் சீமாட்டிக்கு வந்தனம் செலுத்தி, "தாங்கள்தாம் ஸாவியெக்கின் சீமாட்டியா?" என்றேன்.

"ஆம், நான்தான். நீ யார், அடுத்த வீட்டுப் பேட்ரோவிச்சினுடைய மகனா?"

"ஆம். நான் என் தாயிடமிருந்து தங்களுக்கு ஒரு சமாசாரம் கொண்டு வந்திருக்கிறேன்......" என்று அம்மா கூறியதைச் சீமாட்டியிடம் கூறினேன்.

"சரி, நான் நாளை ஒரு மணிக்குக் கட்டாயம் வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சீமாட்டி மறுபடி என்னை உற்றுப் பார்த்தாள். "உன் வயது என்ன?" என்றாள்.

"பதினாறு" என்றேன் நான், திக்கிக்கொண்டு.

ஸாவஸியெக்கின் சீமாட்டி தன் சட்டைப் பையிலிருந்து ஏதோ அழுக்கடைந்த கடுதாசிகள் சிலவற்றை எடுத்து, அவற்றைத் தன் மூக்குக்கருகில் பிடித்துக்கொண்டு படிக்க ஆரம்பித்தாள். திடீரென்று அவள் என் பக்கமாகத் திரும்பி, "நல்ல வயது; பதினாறு வயது; தயை செய்து என் முன்னிலையில் சங்கோசப்படவேண்டாம்; எனக்கு அது பிடிப்பதில்லை" என்றாள்.

நான் அவளுடைய விகாரமான முகத்தையும் உடலையும் அருவருப்போடு பார்த்துக்கொண்டு நின்றேன்.

அச்சமயத்தில் அந்த அறையின் வேறொரு கதவு திறக்கப்பட்டது. முதல் நாள் மாலை நான் தோட்டத்தில் கண்ட பெண் வாசலில் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய முகத்தில் ஒரு கேலிப்புன்னகை தவழ்ந்துகொண்டிருந்தது.

"இவள்தான் என்னுடைய மகள், **ஸினைடா அலெக்ஸாண்ட்ரோவ்னா.** — ஸினா, இவன் நம் அடுத்த வீட்டுக்காரர் பெட்ரோவிச்சினுடைய மகன்.— அப்பா, நான் அப்பொழுதே கேட்க மறந்துவிட்டேனே: உன்னுடைய பெயர் என்ன?" என்று கேட்டாள் சீமாட்டி.

"விலாட்மீர்" என்றேன் நான்.

ஸினைடா தன் தலையை ஒரு புறமாகச் சாய்த்துக்கொண்டு, தன் கண்ணிமைகளை மெதுவாக வெட்டிக்கொண்டு, அதே கேலி கலந்த புன்னகையுடன் என்னைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"நான் ஸ்ரீமான் விலாட்மீரை நேற்றுமாலை தோட்டத்தில் கண்டேன். நான் உன்னை 'ஸ்ரீமான்' என்று அழைப்பதுபற்றிக் கோபிக்கமாட்டாயே?" என்று ஸினைடா என்னைக் கேட்டாள். வெள்ளி மணி கிணுகிணுப்பது போன்ற அவளுடைய குரல் என் செவிகளில் கலகலத்துக்கொண்டு சென்றது.

"தயை செய்து அப்படியே அழையுங்கள்" என்று பதறிக்கொண்டு கூறினேன்.

"உனக்கு இப்பொழுது ஏதாவது வேலை இருக்கிறதா?"

"இல்லை."

"சரி, அப்படியானால், என்னுடன் வந்து கம்பளி பின்னுவதற்கு உதவி செய்யமுடியுமா?"

அவள் தன் கண்களால் என்னைத் தன் பின்னால் வரும்படி சமிக்ஞை செய்துவிட்டுத் திரும்பிச் சென்றாள். நானும் அவள் பின்னால் சென்றேன்.

நாங்கள் இப்பொழுது சென்ற அறை முந்திய அறையைவிடச் சுத்தமாக இருந்தது. நாற்காலி முதலியனவும் கொஞ்சம் நல்லவையாக இருந்தன. என்றால் ஒன்றையும் கவனிக்க முடியவில்லை. கனவு காண்பவன்போல் பரமானந்த நிலையில் இருந்தேன்.

லினைடா ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். தனக்கு முன்னால் இருந்த வேறொரு நாற்காலியில் என்னை உட்கார வைத்துவிட்டு, ஒரு சிவப்புக் கம்பளி நூற்களியை எடுத்து என் கைகளில் சுற்றத்தொடங்கினாள். கீழே குனிந்து நூல் சுற்றப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்தவள் திடீரென்று நிமிர்ந்து, வேகமான ஒரு பார்வையை என்மேல் வீசினாள். நான் கீழே குனிந்து கொண்டேன்.

"நேற்று நீ என்னைப்பற்றி என்ன நினைத்திருப்பாயோ? ஏதோ கெட்டவள் என்று——"

"நானா? சீமாட்டி! ஒன்றும் நினைக்கவே யில்லை" என்றேன் நான் கலவரத்துடன்.

"நான் சொல்வதைக் கேள்: உனக்கு இன்னும் என்னைப்பற்றி ஒன்றும் தெரியாது. நான் ஒரு அசாதாரணமான பேர்வழி. எப்பொழுதும் உண்மையையே விரும்புபவள். உனக்கு வயது பதினாறு; எனக்கோ இருபத்தொன்று ஆகிறது. நான் உன்னிலும் வயதில் மூத்தவள், விளங்குகிறதா? ஆதலால் நீ எப்பொழுதும் என்னிடம் உண்மையே பேசவேண்டும்; நான் சொல்வதெல்லாம் செய்ய வேண்டும். இந்தா, என் முகத்தைப் பார்."

நான் கண்களை நிமிர்த்தி, நாணத்தோடு அவளுடைய முகத்தைப் பார்த்தேன். அவள் இனிமையாக ஒரு புன்னகை புரிந்தாள்.

"என்னைப் பார்: உன் முகம் அழகாக இருக்கிறது. எனக்கு என்னவோ, நீயும் நானும் மிக

நெருங்கிய நண்பர்களாக இருப்போம் என்று தோன்றுகிறது. ஆனால் நீ என்னை விரும்புகிறாயா?"

அவளுடைய குரல் மிக மென்மையாகவும் இனிமையாகவும் இருந்தது.

"சீமாட்டி!" என்று ஆரம்பித்தேன் நான்.

"முதலாவது, நீ என்னைச் 'சீமாட்டி' என்று அழைக்கக்கூடாது. 'ஸினேடா' என்று அழை. இரண்டாவது, சிறுவர்கள் தம் மனத்தில் இருப்பதை ஒளிக்காமல் அப்படியே வயதில் பெரியவர்களிடம் கூறவேண்டும். நீ என்னை விரும்புகிறாய் அல்லவா?"

அவள் என்னோடு இவ்வளவு சகஜமாகப் பேசுவது எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்ததாயினும், அவள் என்னை ஒரு சிறு பையனைப் பாவித்து நடத்தியது என் மனத்தை நோகச் செய்தது. ஆகவே, நான் கொஞ்சம் வெளிப்படையாக, "ஆம், ஸினேடா, நான் உன்னை விரும்புகிறேன். அதை மறைத்து வைப்பது என் விருப்பமல்ல" என்றேன்.

ஸினேடா மறுபடி கீழே குனிந்து கம்பளி நூற்களியைக் கவனிக்க ஆரம்பித்தாள். நான் அவளைக் கவனிக்க ஆரம்பித்தேன்.

இன்று அவளுடைய முகம் நேற்று இருந்ததைவிட அழகாகவும் விளக்கமாகவும் இருந்தது. ஜன்னலின் வழியாக உள்ளே வரும் வெயில் அவளுடைய சுருண்ட கூந்தலிலும் கழுத்திலும் தோளிலும் மார்பிலும் பட்டு அழகு செய்து கொண்டிருந்தது. அவளைக் கூர்ந்து கவனிக்கக் கவனிக்க, அவள் எனக்கு மிகவும் வேண்டியவள்

போலக் காணப்பட்டாள். நேற்றுமுதல் மட்டுமல்ல, பல காலமாக அவளை நான் அறிந்திருப்பதுபோல் தோன்றியது. அவளைக் காண்பதன் முன் நான் எப்படித்தான் உயிர் தரித்திருந்தேனே என்று அதிசயப்பட்டேன்....அவள் அணிந்திருந்த ஆடையின் ஒவ்வொரு விளிம்பையும் பலதரம் முத்தமிட்டுக் களிக்கவேண்டும்போல் தோன்றியது. அவளுடைய சிறிய அழகிய பாதங்களில் பணிந்து எழவேண்டும் போல்.......... 'ஆகா, கடைசியாக இவளைப் பழக்கம் செய்துகொண்டேன். நான் என்ன தவம் செய்தேனே, ஆண்டவனே!' என்று நினைத்துக்கொண்டேன். நாற்காலியை விட்டு எழுந்து குதித்து ஆனந்த நர்த்தனம் செய்துவிடுவேன்போல் தோன்றியது. அவள் இருந்த அந்த அறையிலேயே, பசிதாகம் எதுவும் இன்றி வாழ்நாள் முழுதும் இருந்துவிடலாம் என்று எண்ணினேன்.

அவள் தலைநிமிர்ந்து என்னைப் பார்த்துப் புன்னகை செய்தாள். "ஆ! என் முகத்தை எவ்வளவு ஆவலோடு பார்த்துக்கொண்டிருக்கிருய்!" என்று கூறி என்னைப் பயமுறுத்துவதுபோல் தன் விரலை அசைத்தாள்.

என் முகம் சிவந்தது. 'இவளுக்கு என் எண்ணமெல்லாம் விளங்கிவிட்டது. இவள் என் காதலை அறிந்துவிட்டாள்' என்று நினைத்துக் கொண்டேன்.

அச்சமயம் ஸாஸியெக்கின் சீமாட்டி உட்கார்ந்திருந்த அறையில் ஏதோ அரவம் கேட்டது.

"வினு, பியேலேவ்சோரோவ் உனக்கு ஒரு பூனைக் குட்டி கொண்டுவந்திருக்கிறுர். இங்கே வந்து பார்" என்று சீமாட்டி கத்தினள்.

"ஆ! பூனைக்குட்டி!" என்று கூறிக்கொண்டு வினேடா தன் கையில் இருந்த கம்பளி நூற் கஷ்ளியை என் மடியில் போட்டுவிட்டு வேகமாக முன் அறையை நோக்கி ஓடினுள். நானும் மெது வாக எழுந்து அவளைப் பின்தொடர்ந்தேன்.

அந்த அறையின் நடுவில் ஓர் அழகான பூனைக் குட்டி தன் கால்களே விரித்துக்கொண்டு படுத்திருந் தது. வினேடா அதன் அருகில் முழந்தாள் படி யிட்டு உட்கார்ந்துகொண்டு அதன் தலையைத் தூக்கிப் பார்த்துக்கொண்டிருந்தாள். வாசலில் சுருட்டைமயிர் படைத்த ஓர் அழகிய வாலிபன் நின்று கொண்டிருந்தான். அவன் உடையி லிருந்து அவன் ஒரு போர்வீரன் என்பது தெரிந் தது. முதல்நாள் மாலை தோட்டத்தில் வினேடா வுடன் நின்றவர்களில் அவனும் ஒருவன்.

"ஆகா, என்ன அழகான பூனைக்குட்டி! பச்சைப் பசேல் என்ற கண்கள், நீளமான காதுகள். பியெலெவ், இதைக் கொண்டுவந்து கொடுத்ததற் காக உமக்கு அநேக வந்தனம்" என்றுள் வினேடா, பூனைக்குட்டியுடன் விளையாடிக்கொண்டு.

பியெலெவ்சொரோவ் தன் தலையை ஒரு புற மாகச் சாய்த்தான்.

"நேற்று மாலை உனக்கு ஒரு பூனைக்குட்டி வேண்டுமென்று கூறினுய். அதனுல் இதைக்

கொண்டுவந்தேன். உன்னுடைய ஆணை தெய்வத்தின் ஆணைமாதிரி.''

பூனைக்குட்டி 'மியாவ்' என்றது. வினைடா அதற்கு ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் பசுவின்பால் கொடுத்தாள். பூனைக்குட்டி ஆவலோடு பாலைப் பருகியது; பருகி முடிந்ததும், துள்ளி விளையாட ஆரம்பித்தது.

"இந்தப் பூனைக்குட்டியை நான் கொண்டுவந்து கொடுத்ததற்கு உன் கையை நான் முத்தமிடவேண்டும்'' என்றான் பியெலெவ்சொரோவ்.

"இதோ இரண்டு கைகளையும் கொடுக்கிறேனே'' என்று கூறி வினைடா தன் கைகளைப் பியெலெவ் சொரோவிடம் நீட்டினாள். அவன் அவைகளை முத்தமிடும்பொழுது அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள்.

எனக்குச் சிரிப்பதா, அல்லது எதாவது கூறுவதா, அல்லது மௌனமாக இருப்பதா என்று தெரியவில்லை. அச்சமயம் எங்கள் வீட்டு வேலைக்காரன் வாசலில் வருவதைக் கண்டேன். நான் அவனிடம் சென்று, "என்ன சமாசாரம்?'' என்றேன்.

"எஜமானியம்மாள் உங்களை அழைத்து வரும்படி கூறினார்கள். ஏன் இவ்வளவ தாமதம்? நீங்கள் இங்கே வந்து ஒரு மணி நேரத்திற்குமேல் ஆகிறதே'' என்றான்.

நான் சிமாட்டியிடம் விடை பெற்றுக்கொண்டேன். "நாளை ஒரு மணிக்கு நாங்கள் கட்டாய

மாக வருவோம் என்று உன் தாயிடம் கூறு" என்று கூறிச் சீமாட்டி தன் பொடி டப்பியிலிருந்து ஒரு சிமிட்டாப் பொடியை எடுத்து உறிஞ்சினாள்.

நான் வாசலை நோக்கி நடந்தேன். "ஸ்ரீமான் விலாட்மீர், நீ எங்களை மறந்துவிடக்கூடாது; மறுபடியும் வரவேண்டும்" என்று கூறிவிட்டு ஸினைடா 'பக்' என்று சிரித்தாள்.

'அவள் ஏன் எந்நேரமும் சிரித்துக்கொண்டே இருக்கிறாள்?' என்று நினைத்துக்கொண்டு வீட்டுக்குச் சென்றேன். கால தாமதம் ஆனதற்காக அம்மா என்னை வைதாள். நான் ஒன்றும் பேசாமல் என் அறைக்குச் சென்றேன். துக்கம் என் நெஞ்சை அடைத்தது. பொங்கி வரும் கண்ணீரை அடக்குவதற்கு மிகவும் பிரயாசைப்பட்டேன். ஆம், ஆம், அந்தப் போர்வீரன், பியெலெவ்சொரோவ்மேல் எனக்குப் பொறாமை உண்டாயிற்று.

## அத்தியாயம் 5

**வா**க்களித்திருந்தபடியே மறுநாள் ஒரு மணிக்கு ஸாவலியெக்கின் சீமாட்டி எங்கள் வீட்டிற்கு வந்திருந்தாள். அம்மா அவளைப்பற்றி நல்ல அபிப்பிராயம் கொண்டதாகத் தெரியவில்லை. இருந்தும், சீமாட்டியையும் மகளையும் மறுநாள் எங்கள் வீட்டில் வந்து விருந்துண்டு போகுமாறு கேட்டுக் கொண்டாள். அப்பாவிற்கும் இந்த ஏற்பாடு மிகப் பிடித்திருந்தது. தாம், ஸாவலியெக்கின் பிரபு உயிரோடிருந்தகாலத்தில் அவருடன் சிநேகமாக இருந்ததாகவும், அவர் பணத்திற்காக ஆசைப்பட்டுக் கல்வியறிவு சிறிதும் இல்லாத ஒரு வியாபாரியின் மகளைக் கல்யாணம் செய்துகொண்டதாகவும், பிறகு தம் மனைவியின் செல்வமனைத்தையும் சூதாட்டத்திலும் குடியிலும் தொலைத்துவிட்டதாகவும் அப்பா கூறினார். ஆனால் மகள்மட்டும் தாயைவிடக் கொஞ்சம் நாகரிகமும் சீர்திருத்தமும் உடையவளாக இருப்பதுபற்றித் தமக்குச் சந்தோஷம் என்றும் கூறினார்.

மத்தியான்னச் சாப்பாடு முடிந்ததும் நான் எங்கள் தோட்டத்தில் உலாவச் சென்றேன். ஸினைடாவும் கையில் ஒரு புஸ்தகத்தை வைத்துப் படித்தபடி தன் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் ஒரு புன்னகை செய்

தாள். என்னிடம் ஒன்றும் பேசாமல் மறுபடி புஸ்த கத்தைப் படிக்க ஆரம்பித்தாள். நான் கொஞ்ச நேரம் அவ்விடத்தில் நின்று பார்த்துவிட்டு அப்பால் நடந்தேன்.

யாரோ என்னைத் தொடர்ந்து வருவதுபோல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். அப்பா என்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தார். என் அருகில் வந்ததும், "இவள்தானா ஸாஸியெக்கின் சீமாட்டி யின் மகள்?" என்று கேட்டார்.

நான், "ஆம்" என்றேன்.

"இவளை உனக்குத் தெரியுமா?"

"ஆம், நேற்று இவளிடம் பேசிக்கொண்டிருந் தேன்."

அதோடு அப்பா தாம் வந்த வழியே திரும்பி நடக்கலானார். ஸினைடா நின்றிருந்த இடத்திற்கு நேராக வந்ததும் நின்று ஒரு தரம் தம் உடலை வளைத்து அவளுக்கு வந்தனம் செய்தார். அவளும் முகத்தில் ஆச்சரியக் குறிப்புடன் அவருக்குப் பிரதி வந்தனம் செய்தாள். அவளுடைய ஆச்சரியத்தில் அவளுடைய கையில் இருந்த புஸ்தகங்கூடக் கீழே நழுவி விழுந்துவிட்டது. அப்பா வீட்டை நோக்கி நடந்தார். ஸினைடா அப்பாவையே பார்த்துக் கொண்டு நின்றாள். என்னவோ நான் அறியேன், அப்பா அன்று மிக அழகாகவும் கம்பீரமாகவும் இருந்தார். அவருடைய நிமிர்ந்த தோற்றமும், ஒய்யாரமான நடையும், சுருட்டை மயிரும், துல்லிய

மான உடையும் அவரை ஒரு மன்மதன் போல் எடுத்துக்காட்டின.

அவர் சென்று மறைந்ததும், ஷீனேடா கீழே விழுந்திருந்த தன் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு தன் வீட்டை நோக்கி நடந்தாள். என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

## அத்தியாயம் 6

அன்று மாலையிலும் மறுநாள் முற்பகலிலும், என் மனம் குரங்குபோல் அலைந்துகொண்டிருந்தது. ஒன்றிலும் கவனம் செலுத்த முடியவில்லை. புஸ்தகத்தைத் திறந்தால், எழுத்துக்களும் வார்த்தைகளும் என் கண்களின் முன் ஓர் அர்த்தமுமின்றிப் பறந்து சென்றன. ஒரு வாக்கியத்தைத் திருப்பித் திருப்பிப் பத்துத் தரம் படித்தேன். "ஜூலியஸ் ஸீஸர் போரில் சிங்க ஏறு போல் இருந்தான்." ஆனால் என் மனத்தில் ஒன்றும் பதியவில்லை. பேசாமல் புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு, நெக்டை, நீளக்கோட்டு முதலியவற்றை அணிந்துகொண்டு சாப்பாட்டு அறையை நோக்கி நடந்தேன்.

என் நாகரிகமான உடையைக் கண்டதும் அம்மா என்மேல் சீறி விழுந்தாள். "ஏது, நெக்டையும் அதுவும் இதுவுமாகப் பெரிய மாப்பிள்ளையாகி விட்டாற்போல் இருக்கிறதே! பரீக்ஷை தேறுகிற வழியைக் காணோம். அதற்குள் அலங்காரம் வேறு......?" என்று அடுக்கினாள்.

"விருந்தாளிகள் வருவார்கள், அம்மா" என்று முணுமுணுத்தேன்.

"ஆகா, நல்ல விருந்தாளிகள்! பிரமாதம்! விருந்தாளிகளாம், விருந்தாளிகள்!"

ஆனால் நான் அசையவில்லை. நெக்டையை அணிந்துகொண்டுதான் இருந்தேன்.

சாப்பாட்டு நேரத்திற்கு ஸாவஸியெக்கின் சீமாட்டியும் அவள் மகளும் வந்து சேர்ந்தார்கள். சீமாட்டி வழக்கம்போல் விகாரமான தோற்றத்துடன் காட்சியளித்தாள். அவளுடைய பேச்செல்லாம் தங்களுடைய வறுமையையும் கஷ்டங்களையும் பற்றியதாகவே இருந்தது. ஆனால் ஸினைடா ஓர் அசல் சீமாட்டிபோலவே காணப்பட்டாள். அவளுடைய அழகும், கம்பீரமும் என் கண்களைக் கவர்ந்தன.

சாப்பாட்டு மேஜையில் அப்பா ஸினைடாவுக்கு அருகில் உட்கார்ந்திருந்தார். அவளை அடிக்கடி பார்த்துக்கொண்டும் அவளுடன் பிரெஞ்சுப் பாஷையில் அடிக்கடி ஏதோ பேசிக்கொண்டும் இருந்தார். ஸினைடா அப்பாவைப் பார்த்த பார்வைகளில் கோபமும் பகைமையும் மாறி மாறித் தொனிப்பது போல் இருந்தது.

அம்மாவுக்குத் தாயையும் மகளையும் கட்டோடு பிடிக்கவில்லை. தாயைப் பார்த்து அருவருப்புகொண்டாள். மகளைப் பார்த்து வெறுப்புக் கொண்டாள். மறு நாள் அப்பாவுடன் சம்பாஷிக்கும்பொழுது, "அவள் ஓர் அடம் பிடித்த ஆடுகாலி" என்று கூறினாள்.

"திடீரென்று எப்படி அவர்களைப்பற்றி நீ அபிப் பிராயம் கூற முடியும்? அவர்களிடத்தில் நீ என்ன

தீமையைக் கண்டுவிட்டாய்?" என்று அப்பா கொஞ்சம் கோபத்தோடு கேட்டார்.

சாப்பாட்டு மேஜையில் லினேடா என்னைச் சிறிதும் கவனிக்கவில்லை. சாப்பாடு முடிந்து, அவர்கள் வீட்டுக்குப் புறப்படும் சமயத்திலுங்கூட அவள் என்னைக் கவனிக்கவில்லை. மரணதண்டனை விதிக்கப்பட்டவன்போல் நிலத்தை விறைத்துப் பார்த்துக்கொண்டு நின்றேன். கடைசியாக வாசற் படி தாண்டிய பிறகுதான் லினேடா என் அருகில் வந்து காதோடு காதாக, "இன்றிரவு எட்டு மணிக்கு எங்கள் வீட்டிற்கு வா, கட்டாயம்" என்று கூறினாள். என் ஆச்சரியம் தணிந்து அவளைத் திரும்பிப் பார்ப்பதற்குள் அவள் தன் லேஞ்சியைத் தலையில் போட்டுக்கொண்டு வெளியே நடந்து விட்டாள்.

## அத்தியாயம் 7

அன்று இரவு சரியாக எட்டு மணிக்கு ஸாவஸியெக்கின் சீமாட்டியின் வீட்டிற்குச் சென்றேன். வேலைக்காரன் என்னை அழைத்துக்கொண்டு போய் ஸினைடா இருந்த அறையில் விட்டான். அங்கே ஒரே அமர்க்களமாக இருந்தது. அறையின் மத்தியில் ஸினைடா ஒரு நாற்காலியின்மேல் ஏறி நின்று கொண்டு ஒரு தொப்பியைத் தன் கையில் பிடித்துக் கொண்டிருந்தாள். அந்த நாற்காலியைச் சுற்றி ஐந்து ஆறு ஆடவர்கள் நின்றுகொண்டு அவள் வைத்திருந்த தொப்பிக்குள் தம் கைகளை விட்டு எதையோ எடுப்பதற்குப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தார்கள்.

என்னைக் கண்டதும் ஸினைடா நாற்காலியை விட்டு இறங்கி வந்து, என் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய் அந்த ஆடவர்களின்முன் விட்டு என்னை அவர்களுக்குப் பழக்கம் செய்துவைத்தாள். "இவன்தான் எங்கள் அடுத்த வீட்டுக்காரருடைய மகன் விலாட்மீர்.—இவர் டாக்டர் **லூஷின்,** இவர் **மாலேவ்ஸ்கிப்** பிரபு, இவர் புலவர்சிகாமணி **மேய்தானேவ்,** இவர் காப்டன் **நிர்மார்ஸ்கி,** இவர் பியெலெவ்சொரோவ்......நீங்கள் எல்லோரும் **ஸ்ரீ**மான் விலாட்மீரை உங்கள் நண்பராக ஏற்றுக் கொள்வீர்களென நம்புகிறேன்" என்றாள்.

எனக்கிருந்த கலவரத்தில் அவர்களை அஞ்சலி செய்வதற்குக்கூட மறந்து போய்விட்டேன். டாக்டர் லூஷின் என்பவர்தாம் அன்றைக்கு என்னைத் தோட்டத்து வேலியருகில் கேலி செய்த மனிதர்.

“மாலேவ்ஸ்கிப் பிரபு, ஸ்ரீமான் விலாட்மீருக்கும் ஓர் அதிருஷ்டச் சீட்டு எழுதுங்கள், தயை செய்து. அவரையும் நம் விளையாட்டில் சேர்த்துக்கொள்வோம்” என்றாள் ஸினைடா.

“அது முடியாத காரியம்; ஸ்ரீமான் விலாட்மீர் இப்பொழுதுதானே வந்தார்! சட்டம் என்றால் சட்டந்தான்......” என்று அநேக குரல்கள் ஏககாலத்தில் ஆக்ஷேபித்தன.

“நான் சொன்னால் எழுதித்தான் ஆகவேண்டும். ஏன் இந்தக் குழப்பம்? விலாட்மீர் முதல் முறையாக இப்பொழுதுதானே வந்திருக்கிறார்? புதிதாக வந்தவர்களுக்குச் சட்டம் ஒன்றும் இல்லை. ம்ம்...... எழுதுங்கள் அதிருஷ்டச் சீட்டை, சீக்கிரம்” என்றாள் ஸினைடா.

மாலேவ்ஸ்கி அரை மனத்துடன் எனக்கும் ஒரு அதிருஷ்டச் சீட்டு எழுதினார்.

“விலாட்மீர், உமக்கு இந்த விளையாட்டு விளங்குகிறதா? எங்களில் எவனொருவனுடைய கையில் அதிருஷ்டச் சீட்டு அகப்படுகிறதோ அவனுக்கு ஸினைடா ஓர் அபராதம் கொடுக்க வேண்டும். அந்த அபராதம் என்னவென்றால் ஸினைடா தன் கையை அவன் முத்தமிடக்கொடுக்க

வேண்டும்" என்று டாக்டர் லூஷின் எனக்கு அந்த விளையாட்டின் தாத்பரியத்தை விளக்கினார்.

ஸினைடா மறுபடி நாற்காலியில் ஏறி நின்று கொண்டாள். எல்லாரும் அவளுடைய கையில் இருந்த தொப்பிக்குள் கையை விட்டு ஒவ்வொரு சீட்டை எடுத்தனர். கடைசியாக நானும் ஒரு சீட்டை எடுத்து அதைப் பிரித்துப் பார்த்தேன். ஆ! என்ன ஆச்சரியம்! அதில் "முத்தம்" என்று எழுதப்பட்டிருந்தது.

"கெட்டிக்காரன்! நீதான் அதிருஷ்டசாலி. என்ன சந்தோஷம்!" என்று கூறிக்கொண்டு ஸினைடா நாற்காலியை விட்டு இறங்கி என் அருகில் வந்து என்னை இனிமை ததும்பும் கண்களோடு பார்த்தாள். என் இருதயம் குதித்தது. "உனக்குச் சந்தோஷமாக இல்லையா?" என்று கேட்டாள்.

"எனக்கா......?" என்று பதறினேன் நான்.

"உன்னுடைய அதிருஷ்டச் சீட்டை எனக்கு விற்றுவிடு. நான் உனக்கு நூறு பவுன் தருகிறேன்" என்றான் பியெலெவ்சொரோவ்.

நான் அவனை எரித்துவிடுவதுபோல் ஒரு பார்வை பார்த்தேன். என் கோபப் பார்வையைக் கண்டதும் ஸினைடா கைகொட்டிச் சிரித்தாள். டாக்டர் லூஷின் என்னைப் பார்த்து, "நீ ஒரு வீரன்" என்றார். ஆனால் எனக்கு ஸினைடாவினுடைய 'அபராத'த்தை எப்படிப் பெற்றுக்கொள்வதென்பது தெரியவில்லை. அவள் என்முன் நின்று கொண்டிருந்தாள். சட்டப் பிரகாரம் நான் ஒற்றை

முழங்காலில் நின்று அவளுடைய கையை முத்தமிட வேண்டும். ஆனால் என் கலவரத்தில் நான் இரண்டு கால்களையும் மடக்கி உட்கார்ந்துவிட்டேன். அவளுடைய அழகிய கையை, நடுங்கிக்கொண்டு அலங்கோலமாக முத்தமிட்டேன். அவளுடைய விரல்நகம் என் உதட்டைப் பிறாண்டிக்கூட விட்டது!

அதன் பிறகு வேறு பல விளையாட்டுக்கள் விளையாடினோம். சந்தோஷ மிகுதியில் என் தலை சுற்றுவதுபோல் தெரிந்தது. சில சமயம் ஸினைடா என்னை உஷார்ப் படுத்துவதற்காக என் கன்னத்தில் தன் கையால் மெதுவாக அடிப்பாள். எனக்குப் பரமானந்தமாக இருக்கும். அவள் என்னைத் தன் அருகிலேயே உட்கார வைத்துக்கொண்டாள். ஒரு விளையாட்டில், நான் அவளுக்கு என் பெரிய ரகஸ்யத்தைக் கூறவேண்டி வந்தது. அதுதான் நான் செலுத்தவேண்டிய 'அபராதம்'. அவளுடைய தலையையும் என் தலையையும் சேர்த்து ஒரு பட்டு லேஞ்சியால் மூடினார்கள். அவளுடைய கண்களின் பிரகாசமும், பற்களின் காந்தியும், தலைமயிரின் வாசனையும், அவளுடைய மூச்சின் ஸ்பரிசமும் ஒன்றுசேர்ந்து என்னைப் பைத்தியக்காரனாக்கி விட்டன. "உன் ரகஸ்யம் என்ன?" என்று அவள் என்னை மெதுவாகக் கேட்டாள். "நான் உன்னை என் உயிரினும் மேலாகக் காதலிக்கிறேன். அது தான் என் ரகஸ்யம்" என்று கூறிவிடலாமா என்று முதலில் யோசித்தேன். ஆனால் எனக்குச் சங்கோச

மாக இருந்தது. ஒன்றும் பேசாமல் என் முகத்தை அப்பால் திருப்பிக்கொண்டேன்.

பியெலெவ்சொரோவ் ஒருவன்மட்டும் விளையாட்டில் அவ்வளவாகக் கலந்து கொள்ளவில்லை. அடிக்கடி மூலையில் போய்ப் பதுங்கிக்கொண்டான். அவன் என்னைப் பார்த்த பார்வையில் கோபமும் பொறுமையும் வெளிப்படையாகத் தோற்றுவது போல் எனக்குப் பட்டது. அவன் பசி கொண்ட ஒரு புலிபோல் இருந்தான்.

பன்னிரண்டு மணிக்கு எல்லாருக்கும் அலுத்து விட்டது. எல்லாரும் ஸினைடாவிடம் விடை பெற்றுக்கொண்டு தத்தம் வீடுகளை நோக்கிச் சென்றனர். நானும் வீடு திரும்பினேன்.

வானம் இருண்டு கிடந்தது. ஒரு குளிர் காற்று மரங்களின் இருண்ட தலைகளின் இடையே குமுறிக் கொண்டிருந்தது. அடிவானத்தில் கருமுகில்கள் தம்மைத் தாமே கோபித்துக்கொள்வனபோல் மெதுவாக உறுமிக்கொண்டிருந்தன.

வீட்டில் எல்லாரும் படுத்து உறங்கிவிட்டார்கள். நான் என் அறைக்குச் சென்றேன். எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. என் உடைகளைக்கூடக் களைந்து போடாமல் அப்படியே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன். மந்திரத்தால் கட்டுண்டவன் போல் நெடுநேரம் அப்படியே அசைவற்று உட்கார்ந்திருந்தேன். இதற்கு முன் நான் அறியாத உணர்ச்சிகள் எல்லாம் என் மனத்தில் தோன்றின: ஓர் இனிமை, ஒரு புதுமை. நான்

ஸினேடாவைக் காதலிக்கிறேன் என்ற நினைவு என்னைத் திடுக்கிடச்செய்தது. அவளுடைய கொடி போன்ற சாயல் என் மனக்கண் முன் மிதந்து சென்றது. அவளுடைய கண்களிலே கனவு காண்பது போன்ற புன்னகை. நான் மெதுவாக எழுந்து என் படுக்கையருகில் சென்று, தலையை லேசாகத் தலையணையில் வைத்து, அசைவில்லாமல் நீட்டி நிமிர்ந்து படுத்துக்கொண்டேன். திடீரென்று அசைந்தால் என்னுள்ளே தேங்கிக் கிடந்த அந்தச் சொல்லொணாத இனிமையான திவ்ய ரூபம் அலங்கிக் குலைந்து சீரழிந்து விடும்போல் தோன்றியது.

ஆகாயத்தில் இடியும் மின்னலும் தோன்றின. நான் எழுந்து போய் ஜன்னல் அருகில் நின்று வெளியே நோக்கினேன். அகன்ற வெள்ளிய மணற் பரப்பும், நெஸ்குச்னித் தோட்டத்தின் இருண்ட மரங்களும், தொலைவில் தெரியும் கட்டிடங்களும் மின்னல் ஒளியில் நடுங்கி அசைவது போல் காணப்பட்டன.

கிழக்கு அடிவானத்தில் உதயத்தின் வெண்ணிறம் பரவ ஆரம்பித்தது. மின்னல் ஒளியும் மங்கி நின்றுவிட்டது. இளஞ் சூரியனின் கம்பீரமான ஒளி மின்னலைத் துரத்தியது. என் உள்ளத்திலும் இடியும் மின்னலும் ஓய்ந்துவிட்டன. ஸினேடாவின் தேசு வடியும் உருவம் என் மனத்தில் கம்பீரமாக விளையாடியது. இன்பமயமான ஒரு சாந்தி என் புலன்களைக் கௌவியது. மெய்ம்மறந்து படுக்கையில் விழுந்து தூங்கினேன்.

முதற் காதலின்-இளங்காதலின்-இனிய தூய்மையான உணர்ச்சிகள், மிருதுவான கானம், அமைதி, இருதலை நெகிழ்ச்சி இவையெல்லாம் இப்பொழுது எங்கே ஓடி ஒளிந்துகொண்டன? எங்கே?

# அத்தியாயம் 8

மறுநாள் காலைச் சாப்பாடு முடிந்ததும் அப்பா என் கையைப் பிடித்து என்னைத் தோட்டத்திற்குள் அழைத்துக்கொண்டு சென்றார். முதல் நாள் இரவு லாலிபெக்கின் சீமாட்டி வீட்டில் நடந்ததெல்லாவற்றையும் தம்மிடம் கூறும்படி கேட்டார்.

அப்பாவுக்கும் எனக்கும் இடையில் இருந்த உறவு மிக நூதனமானது. என் படிப்பில் அவர் ஒரு சிரத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை என்பது உண்மையே. ஆனால் அவர் என்னை அவமரியாதையாகவோ மூர்க்கத்தனமாகவோ நடத்தவும் இல்லை. என்னுடைய சுதந்திரத்தைத் தடை செய்ய அவர் முயலவில்லை. ஆனால் அவர் என்னை ஒரு மாதிரியாகத் தள்ளிவைத்து நடத்தி வந்தார். எங்கள் இருவருக்கும் இடையில் நெருங்கிய அன்னியோன்னியம் எதுவும் இல்லை.

நான் அவர்மேல் அபாரமான அன்பு கொண்டிருந்தேன். அவரை மெச்சினேன். உண்மையான ஆண்மகன் என்றால் அப்பாவைப்போலத்தான் இருக்க வேண்டுமென்பது என் எண்ணம். ஆ! அவர்மட்டும் என்னை அப்படித் தள்ளிவைத்து நடத்தாமல் இருந்தால் நான் அவருக்காக என் உயிரைக்கூடத் தியாகம் செய்திருப்பேன். அவர் விரும்பினால் தம்முடைய

ஒரு வார்த்தையினால் அல்லது சமிக்ஞையினால் என்னைத் தம் அடிமையாக்கி விடுவார். ஒரு பிரியமான நண்பனிடத்தில் கூறுவதுபோல அவருக்கு என் இருதயத்தைத் திறந்து காட்டிவிடுவேன். திடீரென்று, என் உள்ளக்கிளர்ச்சி உச்ச நிலையில் நிற்கும் சமயத்தில் அவர் என்னிடமிருந்து நோகாமல் விலகிக் கொள்வார்; பழையபடி என்னைத் 'தள்ளிவைத்து' விடுவார்.

சில வேளைகளில், ஒரு சிறு பையன்போல என்னுடன் ஆடிக் குதித்து விளையாடுவார். சில வேளைகளில் அவர் என்னை ஒரு தாய்போல் சீராட்டிப் பாராட்டுவார். ஒரு சமயம் அவர் என்னைச் சீராட்டிய சீராட்டலில் நான் தேம்பித் தேம்பி அழுது விட்டேன். அவருடைய சிறுபிள்ளைத்தனமும் சீராட்டலும் நெடுநேரம் நீடித்து நிற்பதில்லை. சிறிது நேரத்தில் அவர் தம் உணர்ச்சிகளையெல்லாம் உள்ளே இழுத்துக்கொண்டு ஒரு கற்சிலைபோல் ஆகி விடுவார்.

அவருடைய அழகிய ஆண்மை நிறைந்த முகத்தைப் பார்க்கும்பொழுது என் இருதயம் என்னை அறியாமலே அவரை நாடி ஏங்கி அழும். ஆனால் அவருடைய 'நல்ல குணம்' நான் நினைத்த பொழுதெல்லாம் வந்து விடாது. அவர் தாமாக நினைத்து—அதுவும் என்றைக்கோ ஒரு நாளைக்கு—தம் இனிய சுபாவத்தை வெளிக்காட்டினால்தான் உண்டு; இல்லாவிட்டால், அவரும் சரி, ஒரு கற்சிலையும் சரி.

இப்பொழுது நினைத்துப் பார்க்கும்பொழுது, அப்பா குடும்பக் கவலைகளில் தம் மனத்தை அதிகம் பதியவிடாமல், தாம் மட்டும் வேறாக ஒரு வாழ்க்கை வாழ்ந்து வந்தார் என்று எனக்குப் படுகிறது. அவருடைய குடும்ப வாழ்க்கை புளியம்பழமும் ஓடும் போல் இருந்தது. அவர் ஒரு நாள் என்னிடம் கூறிய வார்த்தைகள் சில இப்பொழுது என் ஞாபகத்திற்கு வருகின்றன. "சந்தோஷம், சந்தோஷம் என்று வீணாகக் கூக்குரல் இடுகின்றனர் மனிதர். சந்தோஷம் தானாக மனிதனைத் தேடி வந்துவிடாது; மனிதனே சந்தோஷத்தைத் தேடி அலையவேண்டும்; கட்டுக் களையும் தகர்த்து எறியவேண்டும். இவை யெல்லாவற்றிற்கும் திடமான மனம் வேண்டும்......" ஒரு வேளை நாம் அதிக நாள் உயிரோடிருக்க மாட்டோம் என்று அவருக்குத் தெரிந்திருந்ததோ என்னவோ? அவர் நாற்பத்தைந்து வயதிற்குள் இறந்துவிட்டார்.

ஸாவஸியெக்கின் சீமாட்டியின் வீட்டில் முதல் நாள் இரவு நடந்ததெல்லாம் அவரிடம் ஒன்றுவிடாமல் கூறினேன். ஸினைடாவைப்பற்றியும் அபாரமாகப் புகழ்ந்தேன். பிறகு அப்பா எழுந்து ஸாவஸியெக்கின் சீமாட்டி வீட்டிற்குச் சென்றார். அங்கே ஒரு மணி நேரம் வரையில் இருந்துவிட்டுத் தம் குதிரையில் ஏறிக்கொண்டு எங்கோ பிரயாணமானார்.

மத்தியான்னம் சாப்பாடு முடிந்ததும் நான் ஸாவஸியெக்கின் சீமாட்டி வீட்டிற்குச் சென்றேன். சீமாட்டி ஏதோ ஒரு பழைய மனுவை என்னிடம் கொடுத்து, அதை வேறொரு காகிதத்தில் அழகாகப்

பிரதி செய்துதரும்படி கேட்டுக்கொண்டாள். நான் அவ்விடத்திலேயே உட்கார்ந்து அதைப் பிரதி செய்தேன். அன்று லீனாடாவை ஒரே ஒருதரந் தான் என்னால் பார்க்க முடிந்தது. அதுவும் அரை நிமிஷ நேரத்திற்குத்தான். அவளுடைய முகம் வெளுப்படைந்தும், கூந்தல் கலைந்தும் காணப் பட்டன. அவளுடைய கண்கள் என்னை இமை கொட்டாமல் விறைத்துப் பார்த்தன......மறு கணம் அவள் தன் அறையின் கதவை மெதுவாகப் பூட்டிக் கொண்டாள்.

ஏனோ......?

## அத்தியாயம் 9

அன்றுமுதல் என் காதல் ஆரம்பமாகி வளர்ந்தது என்று சொல்லலாம். நான் இப்பொழுது ஒரு சிறு பையன் அல்ல, பெரிய காதலன் ஆகிவிட்டேன். காதலுடன் சேர்ந்து அதன் வேதனைகளும் ஆரம்பமாயின. லினெடாவைப் பிரிந்து இருக்கும்பொழுதெல்லாம் நான் அவளை நினைந்து உருகித் தவித்தேன். நான் அவள் அருகில் இருக்கும் பொழுதெல்லாம், பொறாமை, மந்தபுத்தி முதலியவற்றால் வேதனை அடைந்தேன். ஆனால் அவள் இருந்த அறையின் வாசற்படியைக் கடந்து உள்ளே போகும்போது மட்டும் என் மனம் ஒருதரம் சந்தோஷ சாகரத்தில் அழுங்கி எழுந்தது.

லினெடாவும் என் காதலை அறிந்துகொண்டு என்னை ஒரு பம்பரம்போல் ஆட்டிவைத்தாள். என்னுடைய காதல் அவளுக்குச் சிரிப்பை உண்டாக்கியது. என்னைக் கேலிசெய்து வேடிக்கை பார்ப்பதில் அவளுக்குப் பரமதிருப்தி. எவருக்காயினும் 'நாம் பிறருடைய எல்லையற்ற இன்பத்திற்கோ வேதனைக்கோ மூல காரணமாக இருக்கிறோம்' என்ற உணர்ச்சி களிப்பு உண்டாக்குவதாகும்.

என்னை மட்டுமல்ல, தன்மேல் காதல் கொண்டிருந்த மற்றெல்லோரையும் அவள் அப்படித்தான்

நடத்தினுள். அவர்கள் எல்லோரும் அவள் மேல் காதல் கொண்டிருந்தார்கள்.

பிரெலென்சோரோவ் தன்னைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி அவளை எத்தனையோ தரம் கேட்டிருக்கிறான். அவள் அவனைக் கேலி செய்து விட்டாள். மெய்தானேவ் என்ற புலவன் சதா அவளைப் பற்றிப் பாட்டுக்கள் இயற்றி அவளுக்குப் படித்துக் காட்டிக்கொண்டே இருப்பான். அவனை யும் அவள் அவ்வளவாய் லக்ஷியம் செய்யவில்லை. டாக்டர் லூஷினை அவள் கொஞ்சம் மரியாதையாக நடத்தி வந்தாள்; ஆனால் அவர்மேல் காதல் கொண்டிருந்ததாகக் கூறமுடியாது. மாலெவ்ஸ்கிப் பிரபுவுக்கும் அவளுக்கும் இடையில் இருந்த தொடர்புதான் அளந்தறிய முடியாததாக இருந்தது. மாலெவ்ஸ்கி மிக அழகானவன், கெட்டிக்காரனுங் கூட. ஆனால் அவனுடைய பேச்சிலும் செய்கையி லும் ஒரு பொய்ம்மை தொனித்துக்கொண்டிருந்தது. எதையோ மறைக்க முயலுபவன் போலக் காணப் பட்டான். ஆனால் ஸினைடா அவைகளைக் கவனித்த தாகத் தெரியவில்லை. ஒரு வேளை அவளுக்கு அவை விளங்காமல் இருந்திருக்கலாம். அவளுடைய மட்டமான கல்வியும், வறுமையும், சுதந்திரமும் சேர்ந்து அவளுடைய மனத்தில் ஒருவிதமான அசிரத்தையை உண்டுபண்ணியிருந்தனவென்று கூற வேண்டும்.

ஆனால் சில சமயங்களில் மாலெவ்ஸ்கி அவளருகில் இருந்து காதோடு காதாக ரகஸ்யம் பேசும்பொழுது

என் ரத்தம் கொதிக்கும். ஒரு நாள் நான் அவளை, "மாலேவ்ஸ்கியின் சகவாசத்தை நீ எப்படிச் சகித்துக் கொண்டிருக்கிறாய்?" என்றேன்.

ஸினைடா சிரித்தாள். "அவருடைய மீசை எவ்வளவு அழகாக இருக்கிறது! அதனால்தான். உனக்கு அப்படி மீசை இருந்தால்—! அது கிடக்கட்டும். நீ நினைக்கிறாய், நான் அவரைக் காதலிக்கிறேன் என்று. அதெல்லாம் ஒன்றுமில்லை. என்னைவிடத் தாழ்ந்தவர்கள் என்று நான் மதிப்பவர்களை எப்படி நான் காதலிக்க முடியும்? என்னை முழுதும் அடக்கி ஆளக் கூடிய ஓர் ஆண்மகனைத்தான் நான் காதலிக்க முடியும். அப்படிப்பட்ட ஒருவன் எப்பொழுதுதான் வந்து வாய்ப்பானோ......?" என்றாள்.

"அப்போது நீ வாழ்நாள் முழுதும் யார்மேலும் காதல் கொள்ளாமலே இருந்தாலும் இருந்து விடுவாய்" என்றேன் நான்.

"ஏன் அப்படி? நான்தான் உன்னைக் காதலிக்கிறேனே" என்று கூறி என் மூக்கில் தன் விரலால் அடித்தாள்.

ஆமாம், அவளுக்கு என்னுடன் பரிகாசந்தான். ஆனால் உண்மையில் நான் பட்ட பாடு கடவுளுக்குத்தான் தெரியும். படிப்பில் என் மனம் செல்லவில்லை. விளையாட்டிலும் மனம் செல்லவில்லை. கட்டிப்போட்ட நாய் கம்பத்தைச் சுற்றுவதுபோல் நானும் அவளையே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தேன். துயரமும் சந்தோஷமும் மாறி மாறி என்னை வாட்டிக்கொண்டிருந்தன.

ஒரு நாள் மாலை நான் எங்கள் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தேன். ஸினைடாவும் தன் வீட்டுத் தோட்டத்தில் வெறுந் தரையில் கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் என்னைக் காண்பதற்கு முன் மறைந்து போய் விடவேண்டுமென்று அப்பால் அடியெடுத்து வைத்தேன். அதற்குள் அவள் என்னைக் கண்டு தன் அருகில் வரும்படி சமிக்ஞை செய்தாள். நான் வேலியைக் கடந்து சென்றேன். அவளுடைய முகம் துயரமே உருக்கொண்டதுபோல் வதங்கிப் போய் இருந்தது. என் மனம் உருகியது. நான் அவளருகில் போய் உட்கார்ந்ததும், "நீ என்னை ரொம்ப ரொம்பக் காதலிக்கிறாயா?" என்று கேட்டாள். நான் வாய் திறக்கவில்லை. நான் சொல்வதற்குத்தான் என்ன இருக்கிறது?

"ஆம் அதே கண்கள்......" என்று என் முகத்தைக் கூர்மையாகப் பார்த்துக்கொண்டு கூறிவிட்டு, ஸினைடா மறுபடி தன் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டாள். "ஐயோ! எனக்கு வாழ்க்கையே வெறுத்துவிட்டது. கடந்துபோனதை மாற்ற முடியுமா?.........அதை நினைக்க என் மனம் எரிகிறதே. ஐயோ, கடவுளே! என்ன சம்பவிக்குமோ?" என்று முனகினாள்.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. "ஏன்?" என்றேன். அவள் பேசாமல் இருந்தாள். அவளுடைய துயரம் தோய்ந்த முகத்தைப் பார்த்துக்கொண்டு திக்பிரமை கொண்டவன்போல் உட்கார்ந்திருந்தேன்

அவளுடைய வார்த்தை ஒவ்வொன்றும் என் நெஞ்சை அறுத்தது. அந்நேரம் அவளுடைய துயரத்தைப் போக்க என் உயிரை வேண்டுமானாலும் தத்தம் செய்திருப்பேன்.

மரங்களிடையே காற்று ரகஸ்யம் பேசியது. குயில்கள் கூவின. ஆனால் எனக்கு அவளுடைய துயரத்தின் காரணம் புரியவில்லை.

அவள், "காதல் கட்டாயத்தில் வருவதல்ல. கட்டாயத்தால் அற்றுப் போவதுமல்ல. காதலைத் தடை செய்வதென்பது முடியாத காரியம்" என்றாள்.

பிறகு நாங்கள் இருவரும் அவளுடைய வீட்டிற்குச் சென்றோம். அங்கே மெய்தானேவ் தான் இயற்றிய பாட்டு ஒன்றைப் பாடிக்கொண்டிருந்தான்.

"ஆண்தகை உன்னை ஆண்டுகொண்டுன்றன் உள்ளங்கவர்ந்தனனே..." என்று பாடினான் அவன்.

அந்த வரியைக் கேட்டதும் ஸினேடா திடுக்கிட்டவள்போல என்னைப் பார்த்தாள். அவளுடைய கன்னங்கள் சிவந்தன.

அந்தக் கணத்தில்தான் எனக்கு உண்மை விளங்கிற்று. ஆம், ஆம், அவள் யார்மேலோ காதல் கொண்டு விட்டாள்!

# அத்தியாயம் 10

**லி**ண்டா யாரைக் காதலிக்கிறாள் என்பது என்னளவில் பெரிய பிரச்னை யாகிவிட்டது. சதா எனக்கு அந்த எண்ணந்தான். யார் அந்த அதிருஷ்ட சாலி?

லிண்டா முற்றும் மாறிவிட்டாள். முன் போல் அவள் இப்பொழுது சிரித்து விளையாடு வதில்லை. தன் அறைக் கதவைப் பூட்டிக்கொண்டு மணிக்கணக்காக அதற்குள் அடைபட்டுக் கிடப்பாள். யாரோடும் பேசக்கூட மாட்டாள். நான் அவளிடத் தில் உண்டான இந்த மாறுதலைக் கவனிக்கத் தொடங்கினேன்.

நான் எவ்வளவு கூர்மையாகக் கவனித்தும் என் னால் ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் டாக்டர் லூஷின் எப்படியோ என் கவலையையும் கலவரத்தையும் ஊகித்து அறிந்துகொண்டார். ஒரு நாள் அவர் என்னை ஸாவஸியெக்கின் சீமாட்டி வீட் டில் கண்டபொழுது, "நீ சதா இங்கேயே சுற்றிக் கொண்டிருக்கிறாயே. உனக்கு வேறு வேலை இல்லையா? உன் படிப்பு முடிந்துவிட்டதா?" என்று கேட்டார்.

"நான் படிப்பதில்லை என்று உங்களுக்கு யார் சொன்னது?" என்று கொஞ்சம் ஆத்திரத்தோடு கேட்டேன்.

"கோபித்துக்கொள்ளாதே, அப்பா. எல்லாம் உன் நன்மைக்காகவே சொல்லுகிறேன். நீ செய்வது என்ன என்று உனக்கே தெரியவில்லை..........உன்னுடைய வயதில் அது இயற்கையானதுதான். ஆனால் இந்த இடம் எப்படிப்பட்ட இடம் என்பது உனக்குத் தெரியுமா? எங்களைப் போன்ற பெரியவர்களுக்கு இவ்விடத்தில் ஒரு தீங்கும் நேராது. நாங்கள் உலக அனுபவம் பெற்றவர்கள். ஆனால் உன்னைப் போன்ற ஓர் இளம் பிள்ளைக்கு, அப்பா, இந்த இடம் மகா பொல்லாதது! எல்லாவற்றையும் கைவிட்டுப் போய் உன் பாடங்களைப் படி" என்றார்.

அந்தச் சமயத்தில் ஸினைடாவும் அவள் தாயும் உள்ளே வந்தனர். ஸினைடா டாக்டர் லூஷினையும் என்னையும் கண்டதும் எங்கள்மேல் சீறி விழுந்தாள். "என்ன, நான் என்ன செய்கிறேன், எங்கே போகிறேன், யாரைச் சந்திக்கிறேன் என்று வேவு பார்க்கவா வந்திருக்கிறீர்கள்? அதெல்லாம் உங்களால் முடியாது! டாக்டர் லூஷின், உங்கள் மூக்குக் கண்ணாடியை அணிந்து கொள்ளுங்கள். நீங்கள் சுத்த அநாகரிகம்! உங்களைக் கேலி செய்ய இப்பொழுது எனக்கு நேரம் இல்லை. விலாட்மீர், இப்படி ஏன் உன் மூஞ்சியைத் தொங்க வைத்துக்கொண்டிருக்கிறாய்? என்மேல் இரக்கப்படுவதாகக் காட்டிக் கொள்கிறாயாக்கும். அது எனக்குப் பிடிப்பதில்லை" என்று கூறிவிட்டு ஸினைடா கதவைப் 'படார்' என்று சாத்திக்கொண்டு உள்ளே போய்விட்டாள்.

டாக்டர் லூஷின் மறுபடியும் என்னிடம், "நான் சொல்கிறேன்: இது ரொம்ப மோசமான இடம். நீ அநியாயமாகக் கெட்டுப்போவாய். என் வார்த்தையைக் கேள்....." என்றார்.

அன்று மாலை, ஸினைடாவினுடைய அறையில் டாக்டர் லூஷின், மெய்தானேவ் முதலிய எல்லோரும் கூடியிருந்தனர். நானும் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். சம்பாஷணை மெய்தானேவினுடைய பாட்டுக்களைப்பற்றியதாக இருந்தது. மெய்தானேவ் இயற்றிய பாட்டுக்களில் சொற்சுவை ரொம்ப இருக்கிறது என்று ஸினைடா கூறினாள். ஆனால் அவன் எடுத்துக்கொண்ட விஷயங்கள் அவளுக்குப் பிடிக்கவில்லை. அவை களில் கற்பனையும் பொருட்செறிவும் குறைவு என்று அவள் அபிப்பிராயப்பட்டாள். அதன் பிறகு சம்பாஷணை பைரன், விக்டர் ஹியூகோ முதலிய புலவர்களைப்பற்றியும் அவர்களுடைய பாட்டுக்கள், காவியங்கள் ஆகியவற்றைப்பற்றியும் தொடர்ந்து சென்றது.

கடைசியாக ஸினைடா, "நான் இன்று ஒரு புது விளையாட்டுக் கண்டு பிடித்திருக்கிறேன். நான் கூறும் ஒரு பொருளுக்கு நீங்கள் எல்லோரும் உங்களுக்குத் தெரிந்த ஏதாவது ஓர் உவமை கூறவேண்டும். யாருடைய உவமை சிறந்ததாக இருக்கிறதோ, அவருக்குத்தான் பரிசு. விளங்குகிறதா?" என்றாள்.

எல்லோரும் அதை ஆமோதித்தனர்.

"சரி; அதோ மேற்கு அடிவானத்தில் தெரி கிறதே முகிற் கூட்டம். அதற்கு உவமை சொல்லுங் கள் பார்க்கலாம்......நான் நினைக்கிறேன்: அவை கிளியோபெட்ராவைத் தேடிச் சென்ற மார்க் அந்தோனியின் கப்பலில் இருந்த பாய்களை ஒத்திருக் கின்றன" என்று ஸினைடாவே ஓர் உவமையையும் கூறினாள்.

நாங்கள், "அது அப்படித் தோன்றவில்லை" என்று கூறினோம்.

"அந்தோனிக்கு அப்பொழுது வயது என்ன?" என்று ஸினைடா கேட்டாள்.

"அதிக வயதில்லை. வாலிபன்தான்" என்றான் மாலெவ்ஸ்கி.

"அது பிழை. அப்பொழுது அந்தோனிக்கு நாற்பது வயதுக்குமேல் இருந்தது" என்றார் டாக்டர் லூஷின்.

ஸினைடா திடுக்கிட்டாள். "நாற்பது வயதுக்கு மேல்...." என்று இழுத்தபடி டாக்டர் லூஷினை நிமிர்ந்து பார்த்தாள்.

பிறகு சிறிது நேரத்தில் நான் வீடு திரும்பி னேன். "ஆமாம். அவள் யாரையோ காதலிக்கிறாள். ஆனால் யார்....?" என்று என் வாய் என்னை அறி யாமலே முணுமுணுத்தது.

## அத்தியாயம் 11

நாட்கள் பறந்து சென்றன. லீனாடாவின் நடத்தையிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டது. என்றால் அவளுடைய மனநிலையை அறிந்து கொள்ள முடியவில்லை.

ஒரு நாள் நான் அவள் வீட்டிற்குச் சென்ற பொழுது, அவள் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து தன் முகத்தை மேஜைமேல் கவிழ்த்து வைத்துக் கொண்டிருந்தாள். நான் அருகில் சென்றதும் அவள் தன் தலையை நிமிர்த்தினாள். அவளுடைய முகம் முழுவதும் கண்ணீரால் நனைந்திருந்தது.

திடீரென்று அவள் தன் கையை நீட்டி என் தலைமயிரைப் பிடித்து இழுத்தாள்.

"ஐயோ நோகிறதே!" என்றேன் நான்.

"ஆ! உனக்கு நோகிறதா? ஆனால் எனக்கு மட்டும் ஒன்றும் நோவு உண்டாகாது என்று நினைத்தாயாக்கும்!" என்றாள் லீனாடா குத்தலாக.

அவள் என் தலைமயிரைப் பிடித்து இழுத்த இழுப்பில் ஒரு மயிர்க்கற்றை அப்படியே அவளுடைய கையோடு வந்துவிட்டது. "ஆ! என்ன காரியம் செய்துவிட்டேன். ஐயோ பாவம்!

ஆயினும் பாவாயில்லை. இந்த மயிர்க்கற்றையை நான் ஒரு தாயித்தில் போட்டு அடைத்து என் மார்பில் அணிந்து கொள்கிறேன். அதனல் உனக்கு ஏதாவது திருப்தி ஏற்படலாம் அல்லவா?" என்று கூறி அவள் அந்த மயிர்க்கற்றையைத் தன் விரலில் சுற்றிக்கொண்டாள். அவளுடைய கண்களில் இன்னும் கண்ணீர் துளித்துக்கொண்டிருந்தது.

நான் மறுபடி எங்கள் வீட்டிற்குச் சென்ற பொழுது அம்மா அப்பாவோடு ஏதோ சண்டை போட்டுக் கொண்டிருப்பது போல் தெரிந்தது. அப்பா வழக்கம் போல் மௌனம் சாதித்தார். அம்மா பேசியது எனக்கு என்ன என்று விளங்கவில்லை.

சிறிது நேரம் கழித்து அம்மா என்னைத் தன் அறைக்குள் அழைத்து நான் ஸினைடா வீட்டிற்கு அடிக்கடி போய்க்கொண்டிருப்பதைப்பற்றிக் கண்டித்தாள். ஸினைடாவைப்பற்றியும் ஏதோ இழிவாகப் பேசினுள். நான் அதற்கு ஒன்றும் பேசாமல் அம்மாவுடைய கரத்தை முத்தமிட்டுவிட்டு என் அறைக்குள் போய்விட்டேன்.

ஸினைடாவுடைய கண்ணீர் அப்படியே என்னை உலுக்கி எடுத்துவிட்டது. என்றல் ஒன்றும் கிரகித்துக்கொள்ள முடியவில்லை. எனக்கும் அழ வேண்டும்போல் தோன்றியது. என்ன இருந்தும் நான் சிறு பையன்தானே!

என் மனம் தனிமையை நாடியது. எங்கள் வீட்டுக்கு அருகில் இருந்த ஒரு பாழடைந்த

கட்டிடத்தின் உயரமான சுவரில் ஏறி உட்கார்ந்து கொண்டு யோசனையில் ஆழ்ந்து விடுவது எனக்கு வழக்கமாகிவிட்டது. ஒரு நாள் மாலை அப்படி உட்கார்ந்துகொண்டிருக்கும் சமயத்தில், திடீரென்று ஏதோ ஓர் இனிமையான வாசனை லேசாகக் காற்றில் மிதந்து வந்து என்னைத் தாக்கியது. யாரோ என் அருகில் வருவது போன்ற ஓர் உணர்ச்சி என் புலன்களைக் கவர்ந்தது. கீழே குனிந்து பார்த்தேன். ஸினைடா ஒரு சிவப்புவர்ணக் குடையைப் பிடித்துக் கொண்டு ரோட்டில் வேகமாக நடந்து வந்து கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும் நின்று, தன் தொப்பியை நெற்றியின்மேல் தள்ளி விட்டுக் கொண்டு நிமிர்ந்து என்னை நோக்கினாள்.

"என்ன, அந்த உயரத்தில் உட்கார்ந்துகொண்டு என்ன செய்கிறாய்? நீ ஏதோ பிரமாதமாக என்னைக் காதலிப்பதாகச் சொல்லிக்கொள்கிறாயே; எங்கே, அது உண்மையானால் இப்படியே கீழே குதி பார்க்கலாம்" என்றாள்.

அவள் அப்படிக் கூறி முடித்தாளோ இல்லையோ, நான் அப்படியே சுவரிலிருந்து கீழே பாய்ந்துவிட்டேன். ஒருவன் என்னை மேலிருந்து தள்ளிவிட்டால்கூட நான் அவ்வளவு வேகமாகப் பாய்ந்திருக்க முடியாது. சுவரின் உயரம் பதினான்கு அடி இருக்கும். என் கால்கள் நிலத்தில் பட்டவுடனே ஏற்பட்ட அதிர்ச்சியில் நான் கீழே சாய்ந்து விட்டேன். ஒரு கணம் எனக்கு ஸ்மரணை தப்பி விட்டது. மறுபடி அறிவு தெளிந்து பார்க்கையில்

லினேடா என் அருகில் உட்கார்ந்து, அன்பு ததும்பும் குரலில் ஏதோ கூறிக்கொண்டிருந்தாள்: "ஐயோ! தம்பி, உனக்கு எப்படித்தான் துணிவு வந்ததோ? நான்தான் பைத்தியக்காரி கூறிவிட்டேன் என்றால், உன் புத்தி எங்கே போயிற்று? நீ அப்படிச் செய்யலாமா? நான் உன்மேல் அன்பாய் இருக்கிறேன் என்று தெரிந்திருந்தும்—ஐயோ, எழுந்திரேன்..." அவளுடைய குரல் குயில் கூவுவதுபோல் இருந்தது.

அவளுடைய மார்பு என் அருகில் விம்மிக்கொண்டிருந்தது. அவளுடைய கரங்கள் என் தலையை வருடின. அவளுடைய மலர் போன்ற மிருதுவான அதரங்கள் என் முகத்தை முத்தமிட்டுக் கொண்டிருந்தன. என் வாயிலும் முத்தம் இட்டன.........ஆ! என்ன இன்பம்!

என் கண்ணிமைகள் அசைவதைக் கண்டு அவள், "ம்ம், எழுந்திரு; புழுதியில் கிடந்து புரளுகிறாயே!" என்று கூறிக்கொண்டு எழுந்து நின்றாள். "என்ன பைத்தியக்காரத்தனம்! சுத்த முட்டாள் நீ. என்ன, உன் காலில் முட்கள் தைத்துவிட்டனவா? பாதகம் இல்லை. வீட்டுக்குப் போ. நானும் போகிறேன்......." என்றாள்.

அவள் போய்விட்டாள். நான் வீதியிலேயே உட்கார்ந்திருந்தேன். என் கால்கள் தள்ளாடின; தலை சுழன்றது. முட்கள் தைத்த வேதனை வேறே. முதுகு வலி எடுத்தது. ஆனால் நான் அந்தக் கணத்தில் அனுபவித்த இன்பக் கொள்ளையை என்

வாழ்வில் பிறகு ஒரு நாளும் நான் அனுபவித்த தில்லை. அது என் உடல் நோவை மாற்றியது. எழுந்து கூத்தாடிக் கொக்கரித்தேன்....ஆம், நான் பதினாறு வயசுப் பையன்தானே!

## அத்தியாயம் 12

மறுநாள் பகல் முழுவதும் என் இருதயம் காற்றுப் போல் லேசாக இருந்தது. என் சந்தோஷத்திற்கு அளவே இல்லை. என்னுடைய முகத்தில்—ஷீனடாவினுடைய அதரங்கள் முத்தமிட்ட என் முகத்தில்—இன்னும் இன்பம் சுரந்துகொண்டிருந்தது. அவள் கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் அப்படியே என் செவிகளில் எதிரொலித்துக்கொண்டிருந்தது. இந்த ஒப்புயர்வற்ற இன்பத்தை எனக்குக் கொடுத்ததற்காக என் விதியை வாழ்த்தினேன்; விதியிடம் எனக்குக் கொடுப்பதற்கு இதைவிடச் சிறந்த இன்பம் வேறு என்ன இருக்கிறது? இந்த ஒன்றுடன் திருப்தி அடைந்து, விதியை வேறு ஒன்றும் கேளாமல், ஒரு தனிமையான இடத்தில் போய் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டுச் செத்துப் போய்விடவேண்டும்போல் தோன்றியது.

மறுநாள், ஏதோ பெரிய தேவ ரகஸ்யத்தை மனத்துள் அடைத்துவைத்திருப்பவன்போல், அமைதியாகவும் சாந்தமாகவும் ஷீனடா வீட்டிற்குச் சென்றேன். நேற்றைச் சம்பவத்தைப்பற்றி அவளிடம் கேட்டுவிடவேண்டுமென்ற ஆவலினால் என் மனம் துடித்தது. என்னைக் கண்டதும் அவள் ஒன்றும் அறியாதவள்போல், என்னை வழக்கம்போல் பரி

காசம் செய்தாள். அவளுடைய நடத்தையில் ஒரு மாறுதலும் காணப்படவில்லை. ஆனால் அவள் மனம் மட்டும் எங்கோ தொலைவில் சஞ்சரித்துக்கொண்டிருப்பதுபோல் எனக்குப் பட்டது. நேற்றைச் சம்பவத்தைப்பற்றிப் பல்லைக் கடித்துக்கொண்டு அவளைக் கேட்டுவிடலாமா என்று மறுபடி நினைத்தேன். ஆனால் எனக்குத் தைரியம் வரவில்லை. பேசாமல் போய் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டேன்.

அச்சமயம் பியெலெவ்சொரோவ் நாங்கள் இருந்த அறையின் உள்ளே நுழைந்தான்.

"நீ கூறியபடி ஒரு குதிரை தேடிப் பார்த்தேன். ஒன்றும் சரிப்படவில்லை. நேற்றுக்கூட ஒன்று பார்த்தேன். ஆனால் அதுவும் என் மனத்துக்குப் பிடிக்கவில்லை" என்று அவன் ஜினைடாவிடம் கூறினான்.

அவள், "ஏன்?" என்றாள்.

"உனக்குக் குதிரைச் சவாரி செய்யக்கூடத் தெரியாதே; ஏதாவது நேர்ந்துவிட்டால்? உனக்கு ஏன் திடீரென்று இந்த எண்ணம்?" என்றான் பியெலெவ்சொரோவ்.

"அதெல்லாம் உம்மை யாரையா கேட்டது? உம்மால் குதிரை கொண்டுவர முடியாவிட்டால் முடியாதென்று சொல்லிவிடுகிறதுதானே! நான் அடுத்த வீட்டு ஸ்ரீமான் பெட்ரோவிச்சிடம் (என் தகப்பனார்) ஒரு குதிரை கேட்டு வாங்கிக் கொள்கிறேன்."

ஸினைடா என் தகப்பனர் பெயரை அவ்வளவு லகுவாகவும் நம்பிக்கையோடும் கூறியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

"அப்படியானல் நீ ஸ்ரீமான் பெட்ரோவிச்சோடு தான் குதிரைச் சவாரி செய்யப் போவாயாக்கும்!" என்றான் பியெலெவ்சொரோவ்.

"நான் யாரோடு போனல் உமக்கென்ன?"

"சரி சரி, நான் நாளைக்கு எப்படியும் ஒரு குதிரை கொண்டுவருகிறேன்."

"ஆனல், ஏதாவது ஒரு கிழட்டுக் கோவேறு கழுதையைக் கொண்டு வந்துவிடாதீர். விளங்குகிறதா?"

பியெலெவ்சொரோவ் போய்விட்டான். ஸினைடாவுக்கு அப்பாவின் சிநேகம் எப்படிக் கிடைத்ததென்று நான் அதிசயப்பட்டேன்.

## அத்தியாயம் 13

மறுநாள் அதிகாலையில் எழுந்து, கையில் ஒரு தடியையும் எடுத்துக்கொண்டு எங்கள் கிராம எல்லையைக் கடந்து நடக்கலானேன். கால் நடையிலேயே என் துயரத்தைப் போக்கிவிடலாம் என்று எனக்கு நினைப்பு. காலைப்பொழுது மிக ரம்மியமாக இருந்தது. இளஞ் சூரியனின் வெப்பமில்லாத வெயிலும், தென்றலின் சுகமும், மரங்களின் கலகல என்ற அசைவும் என் மனத்திற்கு ஆறுதல் கொடுத்தன.

காடுகளையும் சிறு குன்றுகளையும் கடந்து நான் நெடுநேரமாக அலைந்துகொண்டிருந்தேன். அடிக்கடி என் மனத்தில் ஸினேடாவின் நினைவு எழுந்தது. அவள் எனக்கு அளித்த முத்தங்களும், என் செவிகளில் அவள் கொட்டிய தேன்மொழிகளும், ஆ! அவைகளை நான் எப்பொழுதாவது மறந்துவிட முடியுமா? என் வீரத்தையும், துணிவையும், தியாக புத்தியையும் மெச்சி, அவள் என்னை முத்தமிட்டாள் என்று நினைக்கும்பொழுது எனக்குப் பரமானந்தமாக இருந்தது. அவள் என்னைக் காதலிக்காவிட்டாலும் பரவாயில்லை!

நான் அவளுக்காக என்னதான் செய்யமாட்டேன்? மற்றவர்கள் எல்லாரும், தாம்தாம் அது

செய்வோம் இது செய்வோம் என்று வாயினாற் கூறிக்கொள்வதோடு மட்டும் திருப்தி அடைந்து விடுவார்கள். ஆனால் நான் அதைச் செய்கையில் காட்டிவிட்டேன்! இது மட்டுமா? அவளுக்காக என் உயிரையே விட்டுவிடத் தயாராக இருந்தேன்.

ஸினைடாவைப் புகழ்ந்து என் மனத்திற்குள் பாட்டுக்கள் இயற்றிப் பார்த்தேன். ஆனால் எதுகை மோனை ஒன்றும் சரியாக வரவில்லை. அப்படியே விட்டுவிட்டேன்.

மத்தியான்னம் பன்னிரண்டு மணிக்கு மேலாகி விட்டது. இனி வீட்டுக்குப் போகவேண்டும். அம்மா வைவாள். ஒரு பள்ளத்தாக்கில் இறங்கி அதன் நடுவில் இருந்த ஒற்றையடிப்பாதை வழியாக வீட்டை நோக்கி நடக்கலானேன்.

என் பின்னால் குதிரைகள் வரும் சப்தம் கேட்டது. நின்று திரும்பிப் பார்த்தேன். அருகாக வந்த இரண்டு குதிரைகளில் அப்பாவும் ஸினைடாவும் சவாரி செய்துகொண்டு வந்தனர். அப்பா ஸினைடாவுடன் ஏதோ பேசிக்கொண்டும் புன்னகை செய்துகொண்டும் இருந்தார். ஸினைடா தலை குனிந்து மௌனமாக இருந்தாள். அவளுடைய முகம் வெளுத்திருந்தது. நான் ஆச்சரியப்பட்டேன். இவ்வளவு நேரம் குதிரைச் சவாரி செய்தபின்பும் முகம் வெளுத்திருப்பதென்றால்!

அவர்களுக்குப் பின்னால் வெகு தூரத்தில், பியெலெவ்சொரோவ் ஒரு கறுப்புக் குதிரையில் வந்துகொண்டிருந்தான். நான் வழி விலகி நின்

றேன். அப்பா தம் குதிரையை ஒரு பக்கமாகத் தட்டிவிட்டு ஸினைடாவுக்கு அருகிலிருந்து விலகிக்கொண்டார். ஸினைடா தன் தலையை நிமிர்த்தி அப்பாவைப் பார்த்தாள். பிறகு இருவரும் வேகமாகப் பாய்ந்து சென்றனர்.

நான் கடைசியாக வீட்டிற்குச் சென்ற பொழுது அப்பா சாப்பிட்டுவிட்டு, ஒன்றும் அறியாதவர் போல் ஒரு பத்திரிகையை வெகு சிரத்தையோடு படித்துக்கொண்டிருந்தார். அம்மா வேறு எங்கோ பராக்காக இருந்தாள்.

# அத்தியாயம் 14

அதன் பிறகு ஐந்தாறு நாட்களுக்கு லினேடா என் கண்களில் படவே இல்லை. அவள் தன் அறைக்குள்ளேயே அடைபட்டுக் கிடந்தாள். ஆனால் அவளுடைய 'காதலர்கள்' மட்டும் அவளைப் பார்க்க வராமல் இருந்து விடவில்லை.

ஒரு நாள் நான் டாக்டர் லூஷினை நெஸ்குச்னித் தோட்டத்தில் சந்தித்தேன். அன்றொரு நாள் எங்கள் இருவருக்கும் இடையில் நடந்த சம்பாஷணையின் விளைவாக எனக்கு அவர்பால் கொஞ்சம் பயம் ஏற்பட்டிருந்தது. ஆனால் அவர் மட்டும் அதற்காக என்னிடம் பேசாமல் இருந்து விடவில்லை. அன்றும், அந்தத் தோட்டத்தில் உள்ள மரங்களையும் செடிகளையும் எனக்கு ஒவ்வொன்றாகக் காட்டி அவற்றின் குணாதிசயங்களை விளக்கிக் கொண்டிருந்தார். திடீரென்று அவர் தம்முடைய நெற்றியில் தம் கையால் அறைந்துகொண்டு, "ஐயோ, நான் மடையன்! இதுகாறும் நான் அவளை ஓர் அற்ப வண்ணத்திப் பூச்சி என்றல்லவா நினைத்துக்கொண்டிருந்தேன்! இப்பொழுதுதான் எனக்கு உண்மை விளங்குகிறது. ஆம், அவள் ஒரு பெருந் தியாகி. மற்றவர்கள் பொருட்டு ஏதாவது

தியாகம் செய்வதே சிலருக்குப் பேரின்பம் பயப்பதாக இருக்கிறது" என்றார்.

"என்ன? நீங்கள் சொல்வது ஒன்றும் புரியவில்லையே!" என்றேன் நான்.

"ஒன்றுமில்லை. நான் சொல்லமாட்டேன்" என்று கூறிவிட்டு டாக்டர் லூவுின் மௌனியாகி விட்டார்.

லினைடா என்னை வெறுப்பதுபோல் எனக்குப் பட்டது. எனக்கு அது தீராத வேதனையைக் கொடுத்தது. நான் அவளுக்கு என்ன தீங்கு செய்துவிட்டேன்? அவளுடைய மனத்தில் ஏதோ ஒரு பெரிய குழப்பம், ஒரு மாற்றம் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஒரு நாள் நான் எங்கள் தோட்டத்தில் உட்கார்ந்து லினைடாவின் அறையின் ஜன்னலைக் கவனித்துக்கொண்டிருந்தேன். சிறிது நேரம் சென்றதும் அந்த ஜன்னல் திறக்கப்பட்டு லினைடா அதில் தோன்றினாள். அவளுடைய முகமும் கைகளும் வெளுத்திருந்தன. நெடுநேரமாகத் தொலைவில் உள்ள எதையோ நிலைத்த கண்களோடு பார்த்துக் கொண்டே நின்றாள். அவள் அப்படிப் பார்த்ததை நான் முன் ஒருபொழுதும் கண்டதில்லை. திடீரென்று அவள் தன் கைகள் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து, அவைகளால் தன் வாயையும் நெற்றியையும் தொட்டாள். பிறகு கலைந்திருந்த தன் கூந்தலை ஒதுக்கிவிட்டுக்கொண்டு ஏதோ ஒரு முடிவுக்கு

வந்தவள் போல் தன் தலையை ஒரு தரம் அசைத்தாள். உடனே ஜன்னலையும் மூடிக்கொண்டாள்.

இது நடந்து மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை ஸினைடா என்னைத் தோட்டத்தில் கண்டு, என்னைத் தன் அருகில் வரும்படி அழைத்தாள். அவளுடைய கையில் ஒரு ரோஜா மலர் இருந்தது.

"இப்பொழுது உன் தேக சௌக்கியம் எப்படி இருக்கிறது?" என்று நான் கேட்டேன்.

"ஒன்றும் இல்லை. எல்லாம் இப்பொழுது சரிப்பட்டு விட்டது. ஏன்? என்னிடத்தில் ஏதாவது வித்தியாசம் தெரிகிறதா?"

"ஆமாம், இப்பொழுது நீ முற்றும் மாறி விட்டாய்."

"நான் உன்னைக் கொஞ்சம் கடுமையாக நடத்தி விட்டேன். வலோடியா, நீ அவற்றையெல்லாம் பொருட்படுத்தக்கூடாது. என்னால் வேறு விதமாக நடக்க முடியவில்லை."

"நான் உன்னை நேசிப்பது உனக்குப் பிடிக்க வில்லை; அவ்வளவுதானே?" என்று என் ஆத்திரத்தில் கொட்டிவிட்டேன்.

"என்னை நீ நேசிக்கத்தான் வேண்டும். ஆனால் முன்போல் அல்ல."

"பின் எப்படி?"

"நாம் சிநேகிதர்களாக, பிராண சிநேகிதர்களாக இருப்போம். நான் சொல்வதைக் கொஞ்சம் கவனமாகக் கேள்: நான் உன்னைவிட எத்தனையோ

வயது மூத்தவள். உண்மையில் நான் உனக்கு ஒரு சிற்றன்னை போல; இல்லை, ஓர் அக்கா போல இருக்கிறேன். ஆனால் நீ—"

"நீ என்னை ஒரு சிறு குழந்தைபோல் மதிக்கிறாய்; அல்லவா?

"ஆம். ஓர் அருமையான குழந்தை. இன்று முதல் நீ என்னுடைய பாலசேவகன். உன் புது அந்தஸ்திற்கு அறிகுறியாக இதோ இந்த ரோஜாப் பூவை உன் கோட்டில் அணிகிறேன்; என் அன்பின் சின்னம் இது" என்று கூறி அவள் தன் கையில் இருந்த ரோஜாப்பூவை என் கோட்டில் செருகினாள்.

"நீ முன்னர் எனக்கு வேறு விதமான 'அன்பின் சின்னங்'களும் கொடுத்திருக்கிறாயே" என்றேன் நான் குத்தலாக.

ஸிணடா என்னைக் கடைக்கண்ணால் பார்த்தாள். "ஆ! நீ இன்னும் அதை மறக்கவில்லை! ஆனால் இப்பொழுது நான் அதற்கும் தயார்" என்று கூறி என் நெற்றியில் ஒரு முத்தம் இட்டாள்.

அவள் போய்விட்டாள். "இவளுக்கு இவ்வளவு இனிய சுபாவம் எங்கிருந்து வந்தது?" என்று நான் ஆச்சரியப்பட்டேன்.

ஆனால் என் மனத்தில் காதல்தீ மீண்டும் கொழுந்துவிட்டு எரிந்தது—முன்னிலும் மும்மடங்காக!

## அத்தியாயம் 15

மறுநாள் மாலையிலும் ஸினேடா வீட்டில் வழக்கம்போல் அவளுடைய 'காதலர்கள்' எல்லோரும் வந்து கூடியிருந்தனர். வழக்கம் போல் விளையாட்டுக்களும் ஆரம்பமாயின. ஆனால் அவைகளில் முன்போல் ஸ்வாரஸ்யமும் சிரிப்பும் குதூகலமும் இல்லை. ஸினேடாவிடம் குடிகொண் டிருந்த அமைதி முழுதும் பரந்து வியாபித்திருப் பதுபோல் காணப்பட்டது. நான் ஸினேடாவுடைய பாலசேவகன் என்ற முறையில் அவளருகில் உட்கார்ந்திருந்தேன்.

விளையாட்டில் தோல்வியடைபவர், தாமாகவே ஒரு கதை புனைந்து கூறவேண்டும் என்று ஏற்பாடா யிற்று. கதை சொல்வதுதான் தோல்வியடைபவர் செலுத்தவேண்டிய 'அபராதம்.' முதலாவதாக பியெலெவ்சொரோவின் முறை வந்தது. அவன் தன் மனைவியைப்பற்றிக் கொலை, வியபிசாரம் முதலியன நிறைந்த ஏதோ 'உப்புப் புளி' இல்லாத கதை ஒன்று கூறினான். அடுத்ததாக ஸினேடாவின் முறை வந்தது. அவள் கூரையை அண்ணாந்து பார்த்தபடியே சிறிதுநேரம் யோசனை செய்த பிறகு தன் கதையை ஆரம்பித்தாள்.

"ஒரு சிங்காரமான அரண்மனையின் நடுவில், பொன், வெள்ளி, ரத்தினங்கள் முதலியவற்றால் உன்னதமாக அலங்கரிக்கப்பட்ட ஒரு மகா மண்டபம். அந்தத் தேசத்து ராஜகுமாரி ஒரு நாள் அந்த மண்டபத்திலே ஒரு பெரிய விருந்து நடத்தினாள். அந்த விருந்துக்கு அழகு, வீரம், செல்வம் முதலியன நிறைந்த பல ராஜகுமாரர்களும் பிரபுக்களும் வந்திருந்தனர். அவர்கள் எல்லோரும் அந்த ராஜ குமாரியின்மேல் காதல் கொண்டிருந்தனர்—"

"அந்த ராஜகுமாரி எப்படி இருந்தாள்?" என்று கேட்டான் மாலேவ்ஸ்கி.

"அவள் உயரமாகவும், ஒய்யாரமான ஒரு பூங்கொடி போலவும் இருந்தாள்" என்றாள் ஸினைடா.

நான் ஸினைடாவை நிமிர்ந்து பார்த்தேன். "ஆமாம், நீதான் அந்த ராஜகுமாரி" என்று எனக்குள் கூறிக்கொண்டேன்.

"விளக்கைச் சுற்றி வட்டமிடும் விட்டில்பூச்சிகள்போல், அந்த இளைஞர்கள் எல்லோரும் ராஜ குமாரியைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தனர்" என்று ஸினைடா மறுபடி தன் கதையை ஆரம்பித்தாள்; "ஆனால் அந்த ராஜகுமாரி அவர்கள் ஒருவரையும் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அந்த மண்டபத்திற்கு அருகில் பலமரங்களைக்கொண்ட இருளடைந்த பூங்கா ஒன்று இருந்தது. அதன் மேல் கவிந்துகொண்டிருக்கும் கரிய வானத்திலே நக்ஷத்திரங்கள் கண்சிமிட்டிக்கொண்டிருந்தன. ராஜ

குமாரி ஜன்னலில் நின்று அந்தப் பூங்காவை நோக்கினாள். அந்த இருண்ட மரங்களின் மத்தியில் வெள்ளிமயமான நீரூற்று ஒன்று 'சல சல' என்று பொங்கிக்கொண்டிருந்தது. ராஜகுமாரி அதைப் பார்த்தபடி எண்ணலானாள்: 'ஆ! இந்த இளைஞர்களிடத்தில் அழகு, ஆண்மை, செல்வம், குடிப்பிறப்பு எல்லாம் இருக்கின்றன. நான் காலால் இட்ட பணியை இவர்கள் தலையால் செய்து முடிக்கச் சித்தமாயிருக்கிறார்கள்; எனக்காகத் தங்கள் உயிரைக்கூடத் தியாகம் செய்துவிடுவார்கள். நான் இவர்களை என் சிறுவிரலால் ஆட்டிவைக்கிறேன். ஆனால் அதோ அந்தப் பூங்காவில், சலசலக்கும் நீரூற்றின் அருகே, என் காதலன், என் தலைவன், எனக்காகக் காத்துக்கொண்டிருக்கிறான். அவனிடத்தில் செல்வமும் இல்லை, பதவியும் இல்லை. ஆனால் கட்டாயமாக நான் அவனைத் தேடிவருவேன் என்ற நம்பிக்கை மட்டும் அவனுக்கு நிறைய இருக்கிறது. நினைத்தால், தென்றலுடன் மெல்ல ரகசியம் பேசும் அந்த இருண்ட மரங்களுக்குக் கீழே, சலசலக்கும் வெள்ளிய நீரூற்றின் அருகே நான் அவனுடன் இணைந்து ஒன்றாகிவிட வேண்டும் என்று நினைத்தால், என்னைத் தடை செய்யக்கூடிய சக்தி உலகில் என்ன இருக்கிறது? இந்த அற்பப் பொம்மைகளால் என்னைத் தடை செய்ய முடியுமா...?'" ஸினைடா தன் கதையைச் சடக்கென்று நிறுத்தினாள்.

"இது நீ கற்பனை செய்த கதைதானா, அல்லது......" என்று மாலேவ்ஸ்கி கேட்டான்.

"நாங்களும் அந்த மண்டபத்தில் இருந்து, பூங்காவில் காத்திருக்கும் அந்த அதிருஷ்டசாலி யாரென்று எங்களுக்குத் தெரிந்திருந்தால், நாங்கள் என்ன செய்திருப்போம்?" என்று கேட்டார் டாக்டர் லூஷின்.

"கொஞ்சம் பொறுங்கள்; அதையும் நானே சொல்லிவிடுகிறேன்" என்று இடைமறித்தாள் ஸினைடா; "பியெலெவ்சொரோவ், நீர் அந்த அதிருஷ்டசாலியைச் சண்டைக்கு அழைத்திருப்பீர். மெய்தானேவ், நீர் அவனைப்பற்றி ஒரு வசைப் பாட்டு இயற்றியிருப்பீர். மாலேவ்ஸ்கிப் பிரபு, நீர் அவனுக்கு ஒரு நஞ்சு கலந்த ரொட்டியைக் கொடுத் திருப்பீர். டாக்டர் லூஷின், நீங்கள்—உண்மையாக நீங்கள் என்ன செய்திருப்பீர்கள் என்று எனக்குத் தெரியாது."

"நான், மனம் ஒரு நிலையில் இல்லாத பொழுது விருந்து கொடுக்கக்கூடாது என்று அந்த ராஜ குமாரிக்குப் புத்திமதி கூறியிருப்பேன்" என்றார் டாக்டர் லூஷின்.

"விலாட்மீர், நீ ராஜகுமாரியின் பால சேவகன் என்ற முறையில் அவளுடைய புடைவைத் தலைப்பைப் பிடித்துக்கொண்டு அவளுடன் பூங்கா விற்குள் போயிருப்பாய்" என்றான் மாலேவ்ஸ்கி.

இதைக் கேட்டதும் என் முகம் கோபத்தினால் சிவந்துவிட்டது. ஸினைடா என்னைக் கையமர்த்தி விட்டு, நடுங்குகின்ற குரலில் மாலேவ்ஸ்கியைப் பார்த்து, "உம்முடைய வார்த்தைகளில் விஷம் இருக்

கிறது. விஷக்கிருமிகளுக்கு எங்கள் மத்தியில் இட மில்லை. ஆதலால் நீர் இப்பொழுதே இவ்விடத்தை விட்டு அகன்றுவிடவேண்டும்" என்றாள்.

மாலேவ்ஸ்கி பெரிய கோழை. அவன் ஸினைடாவிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண் டான்.

பிறகு சிறிது நேரத்தில் கூட்டம் கலைந்து எல்லோரும் வீடு சென்றோம்.

எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. ஸினைடா கூறிய கதை என் மனத்தில் கலவரத்தை உண்டு பண்ணியது. அது வெறும் கற்பனைக்கதையா, அல்லது அதில் ஏதாவது மறைபொருள் இருக்குமா? ஆனால் கதை சொல்லும்பொழுது ஸினைடாவின் முகத்தில் தோன்றிய ஆர்வக் குறிப்பு, நெஸ்குச்னித் தோட்டத்தில் டாக்டர் லூஷின் என்னிடம் கூறிய புரியாத வார்த்தைகள், ஸினைடா என்னிடம் கடந்த சில நாட்களாக நடந்துகொண்ட விதம் இவையெல்லாம் சேர்ந்து என் மூளையைக் குழப்பி விட்டன. "இவளுடைய காதலன் யார்?" என்ற கேள்வி என் கண்களின்முன் பயங்கரமான அர்த்தத் தோடு தோன்றி நின்றது. தென்றலுடன் மெல்ல ரகசியம் பேசும் இருண்ட மரங்களின் கீழ், சல சலக்கும் நீரூற்றின் அருகில் காத்திருக்கும் அந்த அதிருஷ்டசாலி யார்....? அந்த அதிருஷ்டசாலி நானாக இருப்பதற்கு நான் எதை வேண்டுமானாலும் கொடுத்துவிடத் தயார். அந்தத் தோட்டம்! ஆமாம், தோட்டந்தான். அங்கேதான்—! நான்

உடனே படுக்கையை விட்டு எழுந்து, என் உடை களை அணிந்துகொண்டு தோட்டத்திற்குள் பிரவே சித்தேன்.

கன்னங் கறேல் என்ற இருளிலே மரங்கள் ஒல்கி அசைந்துகொண்டு நின்றன. காற்று மெல்லென வீசிற்று. நான் அந்தத் தோட்டம் முழுவதும் சுற்றித் திரிந்தேன். கடைசியாக அந்தக் கட்டை வேலியருகில் வந்ததும், அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டேன். ஒரு பெண்ணின் உருவம், திடீரென்று என்னைக் கடந்து வேகமாகச் செல்வது போல் தெரிந்தது: சுவாசத்தை அடக்கிக் கொண்டு இருளைப் பிளந்து பார்த்தேன். அதென்ன? காலடிச்சப்தம்? அல்லது என் இருதயம் அடித்துக் கொள்ளும் சப்தமா? "யார் அங்கே?" என்றேன் மெதுவாக, ஈனஸ்வரத்தில். பதில் இல்லை. பிறகும் அந்த அரவம். யாரேனும் சிரிக்கிறார்களா?........ அல்லது, இலைகளின் அசைவா? எனக்குப் பயமாக இருந்தது...... "யார் அங்கே?" என்றேன் மறு படியும். பதில் இல்லை.

திடீரென்று காற்றுப் பலமாக வீசியது. நட்சத் திரப்பொறி ஒன்று வெடித்துப் பறந்தது. அதன் பிறகு எங்கும் ஆழ்ந்த நிச்சப்தம்.

என் உடல் நடுங்கியது. எங்கோ ஒரு ஜன்னல் மூடப்படுவது போல் கேட்டது.

நான் வீட்டுக்குப் போய் என் கட்டிலில் படுத்துக்கொண்டேன். காதலியைச் சந்திப்பதற்

சென்று போய், அவளைக் காணமல் ஏமாற்றத்துடன் வீடு திரும்பிய காதலன் மனம் போல் என் மனமும் ஏங்கியது......காதலி வேறொருவனைக் கைப்பிடித்து விட்டாள். நான்.......? வெறும் நான்தான்!

## அத்தியாயம் 16

மறு நாட் காலையில் மாலேவ்ஸ்கிப் பிரபு எங்கள் வீட்டிற்கு வந்திருந்தான். அப்பாவுக்கு அவனைக் கண்டாலே பிடிப்பதில்லை. அம்மா மட்டும் அவனைக் கொஞ்சம் மரியாதையோடு நடத்தினாள்.

என்னைக் கண்டதும் மாலேவ்ஸ்கிப் பிரபு, "ஏது, பால சேவகன் ராணியைக் கைவிட்டு விட்டாற்போல் தெரிகிறதே. பால சேவகன் என்றிருந்தால் ராணியை இரவு பகல் கண்ணயராமல் காக்க வேண்டுமல்லவா?" என்ருன்.

"நீங்கள் சொல்வது ஒன்றும் எனக்கு விளங்கவில்லையே!" என்றேன்.

"ஏன், விளங்கும்படிதானே சொன்னேன்? பகலில் காவல் புரியாவிட்டாலும் பாதகமில்லை. இரவில்தான் மிக விழிப்பாக இருக்கவேண்டும், விளங்குகிறதா? தென்றலுடன் மெல்ல ரகசியம் பேசும் இருண்ட மரங்களின் கீழே, சலசலக்கும் வெள்ளிய நீரூற்றின் அருகே—ஞாபகம் இருக்கிறதா? அங்கேதான் நீ காவல் புரிய வேண்டும்......"

மாலேவ்ஸ்கி கூறிய வார்த்தை ஒவ்வொன்றும் விஷம் தோய்ந்த பாணம் போல் என் இருதயத்தில் பாய்ந்தது. அவன் இயற்கையிலேயே வஞ்சக

நெஞ்சம் படைத்தவன்; துரோகி. இருந்தும், அவன் கூறிய செய்தி எப்படியோ என் மனத்தைக் கிளறிவிட்டது. இன்றிரவு எப்படியும் தோட்டத்தில் காவல் புரிவது என்று நிச்சயம் செய்துகொண்டேன். யாராவது என் கண்ணில் பட்டால்—, பட்டுத்தான் பார்க்கட்டுமே! அந்தத் துரோகி யாராக இருந்தாலும் அவன்மேல் கோரமான பழி தீர்த்துக்கொள்வது என்றெல்லாம் பிரதிக்ஞை செய்துகொண்டேன்.

இரவும் வந்தது; பன்னிரண்டு மணியும் அடித்தது. பகலில் தயார் செய்து வைத்திருந்த ஒரு கூரிய மடக்குக்கத்தியை எடுத்து என் இடுப்பில் செருகிக்கொண்டு, என் தலையையும் முகத்தையும் ஒரு கம்பளிப் போர்வையால் மூடிக்கொண்டு தோட்டத்திற்குள் சென்றேன்.

தோட்டத்தின் ஒரு மூலையில் நின்ற ஒரு மரத்தின்கீழ்ப் போய் நின்றுகொண்டு என் காவலை ஆரம்பித்தேன். இரவு நிச்சப்தம் குடி கொண்டிருந்தது. மரங்களும் செடி கொடிகளும் அசைவது அரை இருளில் கண்ணுக்குப் புலப் பட்டது. என் இருதயம் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. "யார் வரினும் வரட்டும். அவனை ஒரு கை பார்த்து விடுகிறேன்" என்று என் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். ஆனால் என் மனத்தில் ஒரே ஓர் ஐயம் தோன்றியது. அந்தத் துரோகியை எப்படித் தாக்குவது? "யாரடா அவன்? அப்படியே நில்! இல்லாவிட்டால் மரணம் நிச்சயம்" என்று அவனை முதலில் பயமுறுத்துவதா? அல்லது

ஒன்றும் பேசாமல் மெதுவாகப் பாய்ந்து அவனுடைய நெஞ்சில் கத்தியைப் பாய்ச்சி விடுவதா?

கத்தியைக் கையில் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, வருவதை எதிர்பார்த்துக்கொண்டு நின்றேன். ஆனல் யாரும் வரவில்லை; ஒன்றும் சம்பவிக்கவில்லை. நேரம் கழிந்துகொண்டே இருந்தது. அரை மணி, ஒரு மணி, ஒன்றரை மணி ......என் ஆர்வமும் தணிந்துவிட்டது. ஆம், மாலேவ்ஸ்கி என்னை ஏமாற்றிவிட்டான், என்னைக் கேலிசெய்துவிட்டான் என்று நினைத்தேன். நான் செய்வதெல்லாம் வெறும் பைத்தியக்காரத்தனம் என்று எனக்குப் பட்டது. என்னைக் கேலி செய்வது போல், என் ஏமாற்றத்தைக் கண்டு நகைப்பதுபோல், எங்கும் நிச்சப்தம் குடி கொண்டிருந்தது. எங்களுடைய நாய்கூட அசைவற்று ஒரு மூலையில் சுருண்டு படுத்திருந்தது.

எனக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. ஆகவே, அந்தப் பாழடைந்த கட்டிடத்தின் அருகில் சென்று பார்த்தேன். அங்கே ஒன்றும் தென்படவில்லை. சுவர் மேல் ஏறி நின்று பார்த்தேன். அகன்ற சமவெளிப் பிரதேசம் என் முன் பரந்து கிடந்தது. அன்றொரு நாள் நான் ஸினேடாவை அவ்விடத்தில் சந்தித்தபொழுது நடந்த சம்பவம் என் ஞாபகத்திற்கு வந்தது.

திடீரென்று எங்கோ ஒரு கதவு திறப்பது போன்ற சப்தம் என் செவிகளில் விழுந்தது.

சுவரிலிருந்து கீழே இறங்கி நின்று உற்றுக் கேட்டேன். யாரோ தோட்டத்தின் வழியே நான் இருந்த பக்கமாக வேகமாய் நடந்து வருவதுபோல் கேட்டது. "ஆ! கடைசியாக வந்துவிட்டாயா, துரோகி! வா" என்று எனக்குள் கூறிக்கொண்டேன். பதறுகின்ற கைகளோடு, கத்தியை வெளியே எடுத்து, விரித்து, என் கையில் தயாராகப் பிடித்துக் கொண்டேன். எனக்குக் கோபம் ஒரு பக்கம். பயம் ஒரு பக்கம். என் ரோமங்கள் குத்திட்டு நின்றன. காலடிகள் மிகச் சமீபத்தில் வந்துவிட்டன. வருபவனை எதிர்ப்பதற்காக என் உடலை வளைத்துக் கொண்டு தயாராக நின்றேன். ஒரு மனிதனின் உருவம் என் கண்களுக்குப் புலப்பட்டது......ஆ! கடவுளே! அது என் தந்தை!

நான் அவரை உடனே அறிந்துகொண்டு விட்டேன். தம் முகத்தையும் தலையையும் கம்பளிப் போர்வையால் மூடி மறைத்திருந்தாலும், அவருடைய கால் நடையிலிருந்து அவர் என் தகப்பனுர் என்று அறிந்துகொண்டேன். அவர் என்னைக் கவனிக்க வில்லை. கொலைக்கும் தயாராக நின்ற நான் அப்பாவைக் கண்டதும், ஒரு பள்ளிக்கூடப் பையன் போல் பலம் குன்றிச் செயலற்று நின்றுவிட்டேன்! என் கையில் இருந்த கத்திகூட நழுவிக் கீழே விழுந்து விட்டது. "அப்பா இச்சமயத்தில், இவ்விடத்தில் என்ன செய்கிறுர்?" என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

அதன்மேல் அங்கு நிற்பதற்கு எனக்குத் தைரியம் உண்டாகவில்லை. வீட்டை நோக்கி நடந்தேன். போகும் வழியில் ஒரு தரம் நின்று வினோடாவின் அறை ஜன்னலை நோக்கினேன். அப்பொழுதுதான் ஜன்னல் கண்ணாடியை மறைத்து, ஒரு வெள்ளைத்திரை மெல்ல மெல்ல இறங்கிக்கொண்டிருந்தது. 'நடப்பது என்ன?' என்று நான் என்னையே கேட்டுக்கொண்டேன்.

இது என்ன கனவா, நினைவா அல்லது உண்மையாக நடந்த சம்பவமா? ஆயிரம் எண்ணங்களும் சந்தேகங்களும் என் மனத்தில் வந்து குவிந்தன. அவைகளுக்கு உருக்கொடுத்து ஆராய்ந்து பார்க்க எனக்குத் தைரியம் வரவில்லை.

## அத்தியாயம் 17

**கா**லையில் மிகுந்த தலைவலியுடன் எழுந்திருந்தேன். என் மனத்தில் முன் ஒரு பொழுதும் இல்லாத ஒரு வெறுமை, ஓர் ஏக்கம் குடிகொண்டிருந்தது. என்னுள்ளே மலர்ந்திருந்த ஏதோ ஒன்று உலர்ந்து சருகாய்விட்டதுபோல் இருந்தது.

சாப்பாட்டு மேஜையில் என் தகப்பனார் வழக்கம்போல் அமைதியாகவும் சாந்தமாகவும் வீற்றிருந்தார். அவர் என்னோடு ஒன்றும் பேசவில்லை. நான் ஸினைடா வீட்டிற்குப் போனேன். "அவளைக் கேட்பதனால் என்ன பிரயோஜனம்? அவளுக்கும் எனக்கும் இடையில் இருந்த பந்தம் இன்றோடு அற்றுப்போய்விட்டது" என்று எண்ணினேன்.

பன்னிரண்டு வயது நிறைந்த ஸினைடாவுடைய தம்பி பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து லீவுக்கு வந்திருந்தான். ஸினைடா அவனை எனக்குப் பழக்கம் செய்துவைத்து என்னை அவனோடு சிநேகமாயிருக்கும்படி கேட்டுக்கொண்டாள். நானும் அவனை அழைத்துக்கொண்டு நெஸ்குச்னித் தோட்டத்திற்கு விளையாடச் சென்றேன். அவன் முகச்சாயல் ஸினைடாவினது போலவே இருந்தது. அவன்மேல் எனக்கு அன்பு ஏற்பட்டது. முதல் நாள் இரவு நான் கை நழுவவிட்ட கத்தியை அப்பொழுது தேடி

எடுத்தேன். லினேடாவின் தம்பி அதைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்டான். நான் அதை அவனுக்குக் கொடுத்துவிட்டேன். அவன் ஏதோ ஓர் இலையின் காம்பை வெட்டி ஒரு குழலைப்போல் செய்து ஊதிக்கொண்டிருந்தான். நானும் சீட்டி அடித்தேன்.

அன்று மாலை நான் எங்கள் தோட்டத்தில் ஒரு மூலையில் மனம் வாடிப்போய் உட்கார்ந்திருந்தேன். அப்பொழுது அங்கே வந்த லினேடா என் நிலையைக் கண்டதும், நான் வாடியிருப்பதற்குக் காரணம் யாது என்று கேட்டாள். நான் அழுது விட்டேன். எவ்வளவு பிரயத்தனம் செய்தும் என் கண்ணீரை அடக்க முடியவில்லை. அவள் பதறிப் போனாள்.

“ஐயோ, உனக்கு என்ன துயரம? வாய்திறந்து சொல்லேன்” என்றாள். நான் அப்பொழுதும் என் அழுகையை விடவில்லை. அவள் என்னுடைய கன்னத்தில் முத்தமிடவந்தாள். நான் என் முகத்தை மறுபக்கம் திருப்பிக்கொண்டு, என் விம்மல்களுக்கிடையில், “எனக்கு எல்லாம் தெரியும்; என்னுடன் ஏன் விளையாடினாய்?......என் காதல்தான் உனக்குத் தேவையில்லையே......”என்றேன்.

“ஐயோ, நான்தான் குற்றவாளி. தெரியாமல் செய்துவிட்டேன். என் உள்ளத்தில் எவ்வளவு கெட்ட குணங்கள் குடிகொண்டிருக்கின்றன! நான் பாவி. ஆனால் நான் இப்பொழுது உன்னைப் பரிகாசம் செய்யவில்லை. உண்மையாக, நான் உன்னை

விரும்புகிறேன். ஏன், எதற்காக என்பதை நீ கனவில் கூட உணரமாட்டாய்......ஆனால், நீ ஏதோ தெரியு மென்றாயே, அது என்ன?" என்று வினோடா தன் கைகளைப் பிசைந்துகொண்டு கேட்டாள்.

அதற்கு நான் என்ன பதில் கூறமுடியும்? அவள் என்னைப் பார்த்தபடி நின்றாள். அவளுடைய கண்கள் என்னை அப்படியே விழுங்கிவிடுவனபோல் இருந்தன.

பிறகு நான் மெய்ம்மறந்து ஓடி ஆடி விளையாடி னேன். நான் அழவில்லை; சிரித்தேன். ஆனால் என் சிரிப்பிலும் என் கண்கள் இரண்டொரு துளி கண் ணீரைச் சிந்தின.

# அத்தியாயம் 18

அடுத்த வாரம் எப்படிக் கழிந்தது என்பதைக் கூறுவது வெகு சிரமமாகத் தோன்றுகிறது. ஒன்றோடொன்று மாறுபட்ட எண்ணங்களும் நினைவுகளும் சண்டமாருதம்போல் என் மனத்தில் குமுறிப் புரண்டன. என் மன நிலையை ஆராய்ந்து பார்ப்பதற்கே எனக்குச் சக்தி இல்லை. ஒன்றையும் கவனியாமல் சிறு குழந்தை போல் சும்மா நாட்களைக் கடத்திக்கொண்டிருந்தேன். ஆனால் ஸினைடாவைப் பார்க்காமல் இருக்கவும் முடியவில்லை. அவள் முன்னிலையில் நெருப்பில் பட்ட மெழுகு போல் உருகி எரிந்துகொண்டிருந்தேன். என்னை உருக்கி எரித்தது எந்த நெருப்பாக இருந்தால்தான் எனக்கென்ன? உருகுவதும் எரிவதும் எனக்கு இன்பமாக இருந்தன. அவ்வளவுதான் எனக்கு வேண்டியது. நான் என்னையே ஏமாற்றிக்கொண்டிருந்தேன். எனக்கு இனி வரப்போவதை உன்னிப் பார்ப்பதற்கே தைரியம் போதவில்லை. ஆனால் திடீரென்று ஒரு நாள் நடந்த சம்பவம் கோடை இடி போல் என்னைத் திடுக்கிடச் செய்துவிட்டது.

அன்று நான் எங்கெல்லாமோ அலைந்துவிட்டுச் சாப்பாட்டு நேரத்திற்கு வீடுவந்து சேர்ந்தேன்.

அப்பா வீட்டில் இல்லை. அம்மா உடம்பு சௌக்கியமில்லையென்று தன் அறையில் படுத்துக்கிடந்தாள். வீட்டில் ஒரே அமைதி. எங்களுடைய வேலையாட்களின் முகங்களிலிருந்து, அன்று ஏதோ அசாத்தியமான சம்பவம் நிகழ்ந்திருக்கிறது என்று ஊகித்துக்கொண்டேன்.

பிலிப் என்ற வேலைக்காரனை அழைத்து, "என்ன சங்கதி?" என்று கேட்டேன். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இடையில் ஏதோ பெருஞ் சண்டை நடந்ததாகவும், அடுத்த வீட்டு இளம் பெண்ணோடு ஏதோ துராகிருதமான சம்பந்தம் வைத்துக்கொண்டிருப்பதைக் குறித்து அவரைக் கடிந்துகொண்டதாகவும், அப்பா அம்மாவின் வயதைக் குறித்து ஏதோ கேலியாய்ச் சொன்னதாகவும், அம்மா அழுததாகவும், இவையெல்லாவற்றிற்கும் காரணம் அம்மாவுக்கு அன்று யாரோ அனுப்பியிருந்த அநாமதேயக் கடிதந்தானென்றும் பிலிப் கூறினான்.

"இதற்கு எல்லாம் ருசு ஏதாவது இருந்ததா? அல்லது வெறும் ஊர் வம்புதானா?" என்று கேட்டேன்.

"ஏன் இல்லாமல்? உங்கள் அப்பா இம்முறை மிகக் கவனமாகத்தான் நடந்து கொண்டார். ஆனால் வேலைக்காரர் உதவி வேண்டுமல்லவா? இவையெல்லாம் மறைக்க முடியாத காரியங்கள். உங்கள் அம்மாவுக்கு எல்லாம் எப்படியோ தெரிந்துவிட்டன" என்றான் பிலிப்.

நான் பிள்ளையை அனுப்பிவிட்டு என் கட்டிலில் சாய்ந்தேன். நான் அழவில்லை, விம்மவில்லை, விக்கவில்லை, கவலைப்படவுமில்லை. இவையெல்லாம் எப்படி, எப்பொழுது நடந்தன என்று ஆச்சரியப்படவுமில்லை; இவையெல்லாம் எனக்கு ஏன் தெரியாமற் போயின என்று நினைக்கவுமில்லை. என் தகப்பனார் மேல் கோபங்கூடக் கொள்ளவில்லை; அவருடைய செய்கைக்காக நான் வெட்கப்படவுமில்லை. நான் அறிந்துகொண்ட தகவல் என்னை அப்படியே திக்கிடச் செய்துவிட்டது. எல்லாம் முடிந்துவிட்டது. என் இருதயத்திலே மலர்ந்த அழகிய மலர்கள் எல்லாம் வெம்பிப் பிசிக்கிக் காலால் மிதிக்கப்பட்டு என்னைச் சுற்றிச் சிதறிக் கிடந்தன.

## அத்தியாயம் 19

மறுநாள் என் தாய் நாங்கள் இருந்த வீட்டை விட்டு, மறுபடி பட்டணத்தில் போய் இருக்கப் போவதாகத் தெரிவித்தாள். என் தகப்பனார் அவளிடம் வெகு நேரம் வாதாடிப் பார்த்தார். அவள் அசையவில்லை. எப்படியும் அந்த இடத்தை விட்டுப் போய்விடவேண்டும் என்று பிடிவாதம் செய்தாள். அப்பாவும் அந்த ஏற்பாட்டிற்கு இணங்கவேண்டியவரானார்.

அன்றுமாலை எங்கள் வீட்டிற்கு மாலேவ்ஸ்கிப் பிரபு வந்தான். எங்கள் வேலைக்காரன் முன்னிலையிலேயே அப்பா அவனிடம், "சில நாட்களுக்கு முன்பு நீர் இங்கே வந்தபொழுது நான் உம்மை வீட்டை விட்டு வெளியே போகும்படி கூறியது ஞாபகம் இருக்கிறதா? அதைப் பொருட்படுத்தாமல் நீர் மறுபடியும் வந்திருக்கிறீர். இனிமேல் நீர் இங்கு வந்தால், நான் கட்டாயமாக உம்மைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவேன். அதோடு, உம்முடைய அநாமதேயக் கடிதமும் எனக்குப் பிடிக்கவில்லை" என்றார்.

மாலேவ்ஸ்கி மறுவார்த்தை பேசாமல், தலை கவிழ்ந்தபடி வெளியே நடந்துவிட்டான்.

மறுநாள் எங்கள் வீடுமாற்றத்திற்கு வேண்டிய முஸ்தீப்புகள் நடந்துகொண்டிருந்தன. அப்பாவின் வேண்டுகோளின்படி அம்மா எல்லாவற்றையும் அமைதியாகவே செய்துகொண்டிருந்தாள்.

எனக்கோ, இந்தக் கலவரங்கள் எல்லாம் முடிந்து என் மனம் எப்பொழுது சமாதானம் அடையும் என்று தோற்றியது. அன்று பகல் முழுதும் பேய் பிடித்தவன்போல் அலைந்து கொண்டிருந்தேன்......ஆனால் ஓர் எண்ணம் மட்டும் என் மனத்தை அறுத்துக்கொண்டிருந்தது. அப்பா கல்யாணமான மனிதர் என்பதும், அவரால் தன்னைச் சட்டப்படி கல்யாணம் செய்துகொள்ள முடியாதென்பதும் ஸினைடாவுக்கு நன்கு தெரியும். பியலெவ்சொரோவைப்போன்ற ஒரு சுயேச்சையான வாலிபனை அவள் கல்யாணம் செய்துகொண்டிருக்கலாமே. அப்படி இருந்தும் இளமையும், அழகும், உயர் குடிப் பிறப்பும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற அவள் அப்பாவுடன் இப்படி...........எதற்காக அவள் இப்படித் தன் வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்ள வேணும்?......ஆகா, இதுதான் காதல், இதுதான் பக்தி, இதுதான் தியாகம் என்று நான் நினைத்தேன். டாக்டர் லூஷினுடைய வார்த்தைகள் என் ஞாபகத்திற்கு வந்தன: "சிலருக்குத் தியாகஞ் செய்வதே பேரின்பம் பயப்பதாகும்."

அன்று மாலை ஸினைடா வீட்டிற்குப் போனேன். ஸாஸியெக்கின் சீமாட்டி என்னைக் கண்டதும், "ஏது, நீங்கள் எல்லாம் இவ்விடத்தை

விட்டுப் போகிறீர்களாமே! ஏன் இந்த அவசரம்?" என்று கேட்டாள். நான் அவளுடைய முகத்தைப் பார்த்தேன். அவளுக்கு நடந்த சமாசாரம் ஒன்றுமே தெரியாது என்று ஊகித்துக்கொண்டேன்.

ஸினேடா என்னைக் கண்டதும், "எங்களை விட்டுப் பிரிந்து செல்வது உங்களுக்கு எளிதாகத் தோன்றுகிறதா, என்ன?" என்று கேட்டாள்.

"சீமாட்டி, நான் உன்னிடம் விடைபெற்றுக் கொள்ள வந்திருக்கிறேன். இனிமேல் நாம் ஒருவரை ஒருவர் சந்திப்போமோ என்னவோ?...."

அவள் என்னைக் கூர்ந்து நோக்கினாள். "நான் உன்னைச் சில வேளைகளில் துன்புறுத்தியிருக்கிறேன். அதையெல்லாம் மறந்துவிடு. ஆமாம், நீ என்னைப் பற்றிக் கெட்ட அபிப்பிராயம் கொண்டிருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும்...." என்றாள்.

"நானா, சீமாட்டி? ஒருகாலும் இல்லை. என் உயிர் என் உடலைவிட்டுப் பிரியும் வரைக்கும் நான் உன்னை ஒரு தெய்வம் போலவே பாவிப்பேன்...."

ஸினேடா இதைக் கேட்டதும் என் அருகில் வந்து, என்னைக் கட்டி அணைத்துக்கொண்டு என் முகத்தில் ஆசை நிறைந்த ஒரு முத்தம் இட்டாள். ஆ! அந்த முத்தம் யாரை நினைத்துக்கொண்டு இட்டதோ? அந்த முத்தத்தினால் யாரிடம் விடை பெற்றுக்கொண்டாளோ....? எனக்கு அதைப் பற்றி என்ன? அந்த முத்தத்தின் இனிமையை ஆவலோடு அனுபவித்தேன். அந்த இனிமை இனித் திரும்பி வராது.

நான் வீட்டை விட்டு வெளியேறினேன். அவளுடைய கடைசி முத்தம் என்னை அமரனாக்கி விட்டது.

பட்டணத்தில் கொஞ்சம் கொஞ்சமாக என் இருதயப்புண் ஆற ஆரம்பித்தது. ஆனால் என் தகப்பனாரிடத்தில் நான் வெறுப்போ கோபமோ கொள்ளவில்லை. உண்மையைச் சொல்லப்போனால் அவரிடத்தில் நான் கொண்டிருந்த மதிப்பு இன்னும் அதிகரித்தது. இந்தப் புதுமையை மனோதத்துவ நூற்புலவர்கள் வேண்டுமானால் ஆராய்ந்து விளங்க வைக்கட்டும்.

பட்டணத்தில் ஒரு நாள் டாக்டர் லூஷினைக் கண்டேன். "ஆஹா, நீயா? நான் உன்னை நல்லபடி யாகப் பார்க்கப்போகிறேனென்று எண்ணியிருந் தேன். உன்னுடைய காதல் பைத்தியம் எல்லாவற்றை யும் மறந்துவிட்டாயா? அதுதான் நல்லது. இப் பொழுது நீ ஓர் ஆண் மகனாகிவிட்டாய்" என்றார்.

நான் ஒரு பெருமூச்சு விட்டேன். லூஷின் மீண்டும், "உணர்ச்சிகளுக்கு அடிமையாகாமல் சாதா ரணமாக வாழக் கிடைப்பது ஒரு பெரிய பாக் கியம். மனிதன் எப்பொழுதும் தன் மனத்தைக் கட்டி ஆளவேண்டும். — பியெலெவ்சொரோவைப் பற்றி ஏதாவது கேள்விப்பட்டாயா?" என்றார்.

"இல்லை."

"அவன் எங்கோ போய்த் தொலைந்துபோனானாம். அவனைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. அவனுக்கும் காதல் பைத்தியம். கிட்டாதாயின்

வெட்டென மறக்கவேண்டுமென்று அவனுக்குத் தெரியவில்லை. நீ ஏதோ தெய்வச்செயலாகத் தப்பி வந்துவிட்டாய். இனிமேல் கவனமாக இரு. சரி, நான் போய்வருகிறேன்.''

நான் இனிமேல் ஸினைடாவைப் பார்க்க மாட்டேன் என்று நினைத்தேன். ஆனால் விதி வேறு விதமாக இருந்தது.

## அத்தியாயம் 20

அப்பா தினமும் கொஞ்ச நேரம் குதிரைச் சவாரி செய்வது வழக்கம். அவரிடம் ஓர் அருமையான, ஆனால் மூர்க்கம் கொண்ட பெட்டைக் குதிரை இருந்தது. அதன் பெயர் 'மின்சாரம்'.

ஒரு நாள் அப்பா குதிரைச் சவாரி செய்யப் புறப்படும்பொழுது நானும் அவரோடு செல்ல விரும்புவதாகக் கூறினேன். அன்று ஏதோ நல்ல குணமாக இருந்தபடியால் என் வேண்டுகோளுக்கு மாறு சொல்லாமல், "சரி" என்று ஒப்புக் கொண்டார். நான் என்னுடைய கறுப்புக் குதிரையில் ஏறிக்கொண்டு புறப்பட்டேன்.

அப்பாவோ கைதேர்ந்த குதிரை வீரர். எனக்கு அவரைப் பின்பற்றிச் செல்வது சிரமமாகத் தான் இருந்தது. அவர் ஓடைகள், வேலிகள் முதலியவற்றைச் சிறிதும் அச்சமின்றிக் கடந்து சென்றார். நானும் அப்பாவிடம் கோழை என்று பெயர் வாங்குவதற்குப் பயந்து அவர் சென்ற வழியே சென்றுகொண்டிருந்தேன்.

கடைசியாக ஓர் ஆற்றோரமாகச் செல்லும் பொழுது ஓர் இடத்தில் அப்பா, தம் குதிரையை விட்டு இறங்கி, என்னையும் இறங்கும்படி செய்து தம் குதிரையின் கடிவாள வாரை என் கையில்

கொடுத்துத் தாம் திரும்பி வரும்வரையும் அவ்விடத்திலேயே இருக்கும்படி என்னிடம் கூறிவிட்டு, ஓர் ஒற்றையடிப்பாதை வழியாக நடந்து சென்றார்.

அப்பாவின் குதிரை என்னை அதிக தூரம் தொந்தரவு செய்தது. அது அடிக்கடி என் சாதுவான குதிரையின் வாலைக் கடிப்பதும், தொங்கிக் குதித்துக் கூத்தாடுவதுமாக இருந்தது. மழையும் தூற ஆரம்பித்தது. ஆனால் அப்பா திரும்பிவருவதாகக் காணவில்லை.

அச்சமயத்தில் யாரோ ஒரு மனிதன் அவ்விடம் வந்து சேர்ந்தான். அவன் என்னிடம் புகையிலை கேட்டான். நான் அவனைச் சிறிதுநேரம் குதிரைகளைப் பிடித்துக்கொண்டிருக்கும்படி கூறிவிட்டு, அப்பா சென்ற ஒற்றையடிப் பாதைவழியாக நடந்தேன். கொஞ்சதூரம் சென்று ஒரு மூலை திரும்பியதும் நான் அப்படியே நின்றுவிட்டேன். எனக்கு நாற்பது கஜ தூரத்தில் ஒரு சிறு வீட்டின் திறந்த ஜன்னலில் கையைச் சாய்த்தபடி அப்பா நின்றுகொண்டிருந்தார். ஜன்னல் அருகில் உட்கார்ந்திருந்த கறுப்பு உடை தரித்த ஒரு பெண்ணுடன் அப்பா பேசிக்கொண்டிருந்தார். அந்தப் பெண் ஸினைடா!

நான் கல்லாய்ச் சமைந்துவிட்டேன். என் பொறிகள் கலங்கின. நான் இதை ஒரு பொழுதும் எதிர்பார்த்திருக்கவில்லை. முதலில் அவ்விடத்தை விட்டு ஓடிவிடலாமா என்று எனக்குத் தோன்றியது. தற்செயலாக அப்பா திரும்பிப் பார்த்துவிட்டால்,

என் கதி அதோகதிதான். ஆனால் ஏதோ ஓர் உணர்ச்சி—அது பொறுமையுமல்ல, பயமும் அல்ல—ஏதோ ஒரு நூதனமான உணர்ச்சி என்னை அவ்விடத்திலேயே அசையாமல் நிற்கவைத்தது. நான் ஜன்னல் அருகில் நடப்பதைக் கூர்ந்து கவனிக்கலானேன். அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்றும் உற்றுக் கேட்டேன்.

அப்பா ஸினைடாவை ஏதோ ஒன்று செய்யும்படி கேட்பது போலவும் அவள் மறுப்பது போலவும் தெரிந்தது. அவளுடைய கவலை தோய்ந்த அழகிய முகத்தில், காதலும், பணிவும், ஏக்கமும் ஒருங்கே பிரதிபலித்தன. அவள் கீழே குனிந்தபடி புன்னகை செய்துகொண்டிருந்தாள். அப்பா தம் தலையில் இருந்த தொப்பியைச் சரிப்படுத்தி வைத்துக் கொண்டார். அந்தச் செய்கை அவருடைய ஆத்திரத்தைத் தெரிவித்தது. அவர், “என்னை விட்டுப் பிரிந்து இருப்பது உனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறதோ?” என்றார்.

ஸினைடா நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு தன் கையை வெளியே நீட்டினாள். திடீரென்று என் கண்ணெதிரே ஓர் எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது. அப்பா தம் கையில் இருந்த சவுக்கை ஓங்கி ஸினைடாவின் கையில் பளீர் என்று அடித்தார். எனக்கு வாய்விட்டு அலறவேண்டும் போல் தோன்றியது. ஸினைடாவின் உடல் நடுங்கியது. ஒன்றும் பேசாமல் அப்பாவை நிமிர்ந்து பார்த்தாள். பிறகு மெதுவாக, தன் அடிபட்ட

கையை உயர்த்தி அதிலிருந்த ரத்தம் கசியும் காயத்தை முத்தமிட்டாள். அப்பா உடனே தம் கையில் இருந்த சவுக்கைத் தூர வீசிவிட்டு, வேகமாகப் படிக்கட்டுகளில் ஏறி அந்த வீட்டிற்குள் ஓடினர். ஸினைடா தன் கைகளை விரித்துக் கொண்டு எழுந்து தலை குனிந்தபடி உள்ளே நகர்ந்தாள், அப்பாவை அணைத்துக் கொள்வது போல்......

நான் திகில்கொண்டு அவ்விடத்தை விட்டுக் குதிரைகள் நின்ற இடத்தை நோக்கி ஓடினேன். என் மனம் இருண்டு கிடந்தது. என்னல் ஒன்றும் நினைக்க முடியவில்லை. அப்பாவுக்குச் சிலவேளைகளில் இப்படி ரௌத்திராகாரமான கோபம் வருவதுண்டு என்பது எனக்குத் தெரியும். இருந்தும் நான் கண்ட காட்சி!—எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனல் ஸினைடாவின் முகத்தில் நான் கண்ட புன்சிரிப்பும், அவளுடைய பார்வையும் என் மனத்தில் அப்படியே பதிந்துவிட்டன. நான் ஒருபொழுதும் அதை மறக்கமுடியாது. நான் ஆற்றின் பிரவாகத்தைப் பார்த்தபடி வெறி பிடித்தவன் போல் நின்றேன். என் கண்களிலிருந்து பாய்ந்த கண்ணீரையும் நான் கவனிக்கவில்லை. 'ஐயோ, அப்பா அவளை அடித்துவிட்டார்...... அடித்துவிட்டார்......அடித்துவிட்டார்' என்று நினைத்துக்கொண்டிருந்தேன்.

"அடே, என்ன செய்துகொண்டு நிற்கிறாய்? எங்கே என் குதிரை?" என்று கேட்டுக்கொண்டு

அப்பா வந்தார். நான் ஒரு சூத்திரப்பாவைபோல் ‘மின்சார’த்தின் கடிவாளவாரை அவரிடம் கொடுத்தேன்.

அப்பா குதிரைமேல் பாய்ந்து ஏறினர். குதிரை மருண்டு துள்ளிப் பாய்ந்தது. ஆனல் அப்பா அதைச் சாதுர்யமாகச் சாந்தப்படுத்தினர். தம் கையால் குதிரையின் முதுகில் ஓங்கி அடித்தார். “ஆ! என்னிடம் சவுக்கு இல்லையே!” என்று மெதுவாக முணுமுணுத்தார்.

எனக்கு அந்தச் சவுக்கைப்பற்றிய ஞாபகம் வந்ததும் என் உடல் நடுங்கியது. “அப்பா, சவுக்கை எங்கே போட்டுவிட்டீர்கள்?” என்று கேட்டேன்.

அப்பா என் கேள்விக்கு ஒரு பதிலும் கூருமல் தம் குதிரையைத் தட்டிவிட்டு முன் சென்ருர். நானும் என் குதிரையைத் தட்டிவிட்டு, அவர் அருகில் சென்றேன். அவருடைய முகத்தை எப்படியும் ஒரு தரம் பார்த்துவிடவேண்டுமென்று ஆவலாக இருந்தது.

“நான் உன்னை அதிக நேரம் காக்கவைத்ததற்காக என்மேல் கோபமா?” என்று அப்பா கேட்டார்.

“இல்லை, அப்பா; ஆனல் உங்கள் சவுக்கை எங்கே தொலைத்துவிட்டீர்கள்?” என்று மறுபடியும் கேட்டேன்.

அப்பா என்மேல் வேகமான ஒரு பார்வையைச் செலுத்தினர். “நான் அதை எங்கும் தொலைக்கவில்லை.

அதை வேண்டுமென்றே வீசிவிட்டேன்" என்றார். அப்பா யோசனையில் ஆழ்ந்தார். அவருடைய தலை கவிழ்ந்தது. எந்நேரமும் கம்பீரமும் ஆண்மையும் குடிகொண்டிருந்த அவருடைய முகம், எவ்வளவு தூரம் கனிந்து அன்பையும், குழைவையும், இரக்கத்தையும் வெளியிடக்கூடுமென்பதை அப்பொழுது தான் முதல் முதலாக உணர்ந்தேன்.

அப்பா தம் குதிரையை வேகமாகத் தட்டிவிட்டார். நான் பின் தங்கிவிட்டேன்.

'ஆகா! அதுதான் காதல்; அதுதான் பிரேமை. அடித்தது, காதலன் கையாக இருந்தாலும், சவுக்கடி நோவுண்டாக்காதா? கொஞ்சமும் கோபம் அடையாமல் அந்த அடியைச் சகித்துக் கொண்டிருப்பதென்றால்!......உண்மையான அன்பு உண்டானால் எதையும் சகித்துக்கொள்ளலாம் போலும்!......நான் வேறென்னவோ எல்லாம் கனவுகண்டேனே......' என்று அன்றிரவு என் அறையில் இருந்துகொண்டு எண்ணினேன். அந்த மகத்தான காதலின் முன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது என்னுடைய காதல் குழந்தை விளையாட்டுப்போல் தெரிந்தது. அது என்னைப் பயமுறுத்தியது. என்னைக் கவர்ந்தது. எனக்கு அதன் தன்மையை அளந்து அறியமுடியவில்லை.

மேற் கூறிய சம்பவம் நடந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு, நான் பீட்டர்ஸ்பர்க் ஸர்வகலாசாலையில் ஒரு மாணவனாகச் சேர்ந்துகொண்டேன். அம்மாவும் அப்பாவும் பீட்டர்ஸ்பர்க் நகரத்

திற்குத் தங்கள் ஜாகையை மாற்றிக்கொண்டனர்.

நான் ஸர்வகலாசாலையில் சேர்ந்து ஆறு மாதத்தில் அப்பா இறந்துவிட்டார். அவர் இறப்பதற்குச் சில நாட்களுக்கு முன் மாஸ்கோவிலிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்ததாகவும், அதனல் அவர் மிக்க மனக்குழப்பம் அடைந்ததாகவும், அவர் அம்மாவிடம் போய்க் கண்ணீர் சொரிந்து ஏதோ இரந்து கேட்டதாகவும்—ஆமாம், அப்பா கண்ணீர் சொரிந்தாராம்!—அம்மா மறுத்துவிட்டதாகவும் பின்னல் அறிந்தேன். அவர் இறந்த அன்று காலையில் எனக்குப் பிரெஞ்சுப் பாஷையில் ஒரு கடிதம் எழுதிவைத்திருந்தார்: "மகனே, பெண்ணின் காதலை அஞ்சி நட. அது அமுதம், அது விஷம்......" என்றெல்லாம் எழுதியிருந்தார்.

அவர் இறந்த பிறகு அம்மா மாஸ்கோவிற்குப் பெருந்தொகையாகப் பணம் அனுப்பினள்.

## அத்தியாயம் 21

**நா**ன்கு வருஷங்கள் ஓடி மறைந்தன. நான் ஸர்வகலாசாலைப்படிப்பை முடித்துக்கொண்டு வேலை தேடிக் கொண்டிருந்தேன். ஒரு நாள் மாலை ஒரு நாடகக்கொட்டகையில் புலவன் மெய்தானேவைச் சந்தித்தேன். மெய்தானேவ் இப்பொழுது அரசாங்க உத்தியோகஸ்தன்; கல்யாணமும் ஆகியிருந்தது அவனுக்கு. யோக க்ஷேமங்கள் விசாரித்து முடிந்ததும் நாங்கள் பொதுவிஷயங்களைக் குறித்துப் பேசிக்கொண்டிருந்தோம். திடீரென்று அவன் என்னை, "உனக்குத் தெரியுமா? மதாம் டொல்ஸ்கி இப்பொழுது இந்நகரில் இருக்கிறாளே" என்று கேட்டான்.

"யார் மதாம் டொல்ஸ்கி?" என்றேன் நான்.

"என்ன அதற்குள் மறந்துவிட்டாயா? நம் எல்லோரையும் பைத்தியக்காரர்கள் ஆக்கினாளே, லினைடா அலெக்ஸாண்ட்ரோவ்னா அவள்தான். இப்பொழுது அவள் மதாம் டொல்ஸ்கியாக மாறியிருக்கிறாள். ஸ்ரீமான் டொல்ஸ்கி பெரிய பணக்காரர். லினைடா அவரைக் கல்யாணம் செய்துகொண்டதால் இப்பொழுது சுகமாக இருக்கிறாள். ஏதோ அவளுடைய அதிருஷ்டம். இல்லாவிட்டால் அவளைச் சூழ்ந்திருந்த கெட்ட பெயருக்கு ஒரு

வரன் அகப்படுவதென்றால் லேசான காரியமா? அவளுடைய அழகுக்கும் வல்லமைக்கும் உலகில் எல்லாம் சாத்தியமாகும். அவள் இப்பொழுது முன்னிலும் அதிக அழகாக இருக்கிறாள். உன்னைக் கண்டால் சந்தோஷப்படுவாள். ஒரு நாளைக்கு நீ அவளைப் போய்ப் பார்" என்று கூறி மெய்தானேவ் எனக்கு வினைடா குடியிருந்த வீட்டின் விலாசத்தைக் கொடுத்தான்.

என் மனத்தில் பழைய ஞாபகங்கள் தோன்றின. அடுத்த தினமே என் 'முதற் காதலி'யைப் போய்ப் பார்த்துவிடுவது என்று முடிவு செய்து கொண்டேன். ஆனால் அவசரமான அலுவல்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்தபடியால், அந்த வாரம்முழுவதும் அவளைப் போய்ப் பார்ப்பதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. என்னுடைய பொல்லாத வேளை, அடுத்த வாரங்கூட அதற்கு அவகாசம் கிடைக்கவில்லை.

கடைசியாக ஒரு நாள், வேகமாக அடித்துக் கொள்ளும் இருதயத்தோடு அவள் வீட்டை நோக்கி நடந்தேன். வீட்டு வாசலில் நின்ற காவற்காரனிடம் விசாரித்தபொழுது அவன், "மதாம் டொல்ஸ்கி நான்கு நாட்களுக்கு முன் பிரசவத்தில் திடீரென்று இறந்துபோய்விட்டாள். ஸ்ரீமான் டொல்ஸ்கி பைத்தியம் கொண்டவர்போல்......" என்றபோது என் இருதயத்தில் வேல் பாய்ந்தது போன்று இருந்தது. 'நான் கொஞ்சம் சிரத்தை கொண்டிருந்தால் அவளை உயிரோடு பார்த்திருக்கலாம். ஆனால் நான் பார்க்கவில்லை. இனி அவளை

ஒரு பொழுதும் பார்க்கமுடியாது' என்ற நினைவு என் மனத்தைப் பிடுங்கித் தின்றது. 'ஆ! அவள் போய்விட்டாள். என் வாழ்விலிருந்து மறைந்து விட்டாள்' என்று உன்மத்தம் கொண்டவன்போல் பிதற்றிக்கொண்டு வெளியே நடந்தேன்.

பழைய சம்பவங்கள் அப்படியே என் மனக் கண்முன் எழுந்து நின்று என்னைச் சித்திரவதை செய்தன. இந்தக் கோரமான முடிவை எதிர் நோக்கித்தானே அந்தக் கன்னி ஸினைடா, அப்படித் துடிதுடித்துக்கொண்டிருந்தாள். இதுதானா அவ ளுடைய வேகமான, ஜோதிமயமான இள வாழ்வின் புதிருக்கு விடை? அவளுடைய திவ்விய மான உருவம் அப்படியே என் மனத்திரையில் தோன்றியது. அந்த அழகிய ஆழமான கண்கள், சுருண்ட கூந்தல், கொடிபோல் துவளும் இடை இவையெல்லாம் இப்பொழுது எங்கே? எல்லாம் இப்பொழுது சவக்குழியின் ஆழமான இருளிலே விறைத்துப் போய் மங்கிக் கிடக்கின்றன. ஒருவேளை தன் மரணத்திலும் என் தகப்பனாரைத் தேடினாளோ? அவரை விட்டு அவளால் இக்கொடிய வாழ்வைத் தனியே சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை போலும்!

இளமை! ஓ இளமையே! உனக்கு அச்சம் என்பது இல்லையா? நீ ஒன்றையும் பொருட் படுத்த மாட்டாய்! உலகத்திலுள்ள சகல செல்வங்களுக் கும் அதிபதி நீ! துயரமும் ஏக்கமும் உன்னை வருத்துவதில்லை. அவை உனக்கு மகிழ்ச்சியையே

கொடுக்கின்றன. நீ கொண்டிருக்கும் கர்வத்திற்கும் ஓர் அளவில்லை. அதனால் உன் நாட்கள் ஒவ்வொன்றாகத் தேய்ந்து மறைந்து போவதுகூட உனக்குத் தெரிவதில்லை. உன் சம்பத்து எல்லாம் உருகி அற்றுப் போகின்றது; தீயில் பட்ட மெழுகு போலவும் வெயிலில் பட்ட பனிக்கட்டி போலவும் உருகுகின்றது.

ஒருவேளை, வருங்காலத்தைப்பற்றி யோசிக்காமல், நிகழ்காலத்தையே நிலையுள்ளதாக மதித்து, எல்லாம் உன் வல்லமைக்குள் அடங்கியதுதான் என்று கர்வம்கொண்டு உன் செல்வம் அனைத்தையும் காற்றிலே அள்ளித் தூற்றும் உன் கவலையற்ற மனப்பான்மை ஒன்றில்தான் உன் பெருமை தங்கியிருக்கிறது போலும்!

லினேடா இறந்த சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் நான் ஒரு கிழவியின் வீட்டிற்குப் போயிருந்தேன். அந்தக் கிழவி வறுமையிலும் பிணியிலும் தனிமையிலும் பல காலமாகக் கிடந்து அழுந்தியவள். அவளுடைய வாழ்வு பெரிய கண்ணீராவியாக இருந்தது. ஆமாம், அவளுக்குச் சாந்தியளிக்கும் மரணத்தை அவள் சந்தோஷமாக வரவேற்பாள் என்று நான் நினைத்திருந்தேன். ஆனால் உண்மையாக மரண தேவன் அவளை நெருங்கிய பொழுது, அவள் தனக்கு இன்னும் ஆயுள் கொடுக்கவேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்தாள். கடைசியாக அவளுடைய புலன்கள் ஒடுங்கி அறிவு தேய்ந்தபிறகுங்கூட அவளுடைய முகம்

பயத்தையும் கோரத்தையும் எடுத்துக் காட்டியது! இந்தக் கிழவிக்கே உயிர் வாழ்வதில் இவ்வளவு ஆசை யென்றால், தன் இளமையின் முழு மலர்ச்சியில் போய்விட்ட என் வினோடாவுக்கு—! 'வினோடா வின் ஆன்மா சாந்தியடையட்டும். அவளுடைய பாபங்கள் மன்னிப்புப் பெறட்டும்' என்று ஆண்ட வனை வேண்டிக்கொண்டேன். அவளுக்காக மட்டும் அல்ல, என் தகப்பனாருக்காகவும் எனக்காகவும் நான் ஆண்டவனை நோக்கிப் பிரார்த்தித்தேன்.

இதை எழுதுகின்ற இக்கணத்தில் நான் கிழவனாக இருக்கிறேன். என் இளமை எப் பொழுதோ போய்விட்டது. காலை, மத்தியான்னம் எல்லாம் முடிந்து என் வாழ்வு இப்பொழுது அஸ்த மனத்திற்கு வந்துவிட்டது. ஆனால் இப்பொழுதும் என் இளைய இருதயத்திலே பூத்த அந்த 'முதற் காதல்' எனக்கு இனிமையையும் புதுமையையும் கொடுக்கிறது. அதை நான் எப்படி மறக்கமுடியும்?

முற்றிற்று



PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE.

# குமுதினி

உலக மகாகவி

**ஸ்ரீ ரவீந்திரநாத் டாகுர்**

*எழுதிய அரிய நவீனம்*

(ஸ்ரீமதி ரங்கநாயகி மொழிபெயர்ப்பு)

கோஷால் குடும்பத்தாருக்கும் சட்டர்ஜி குடும்பத்தாருக்கும் இடையே சில தலை முறையாக விரோதபாவம் உண்டு. பின்னர், கோஷால் குடும்பம் சீர்குலைந்து விடுகிறது. நாளடைவில் அக்குடும்பத்தைச் சேர்ந்தவனாகிய மதுசூதனன் தன் சொந்த முயற்சியால் பணக்காரனாகிறான். அப்போது சட்டர்ஜி குடும்பம் கடன்பளுவினால் திண்டாடிக்கொண்டிருக்கிறது. அந்தக் குடும்பத்துப் பெண் குமுதினியைத் தான் முன் தீர்மானித்தபடி மதுசூதனன் மணக்கிறான். குலகௌரவத்தையே இருவரும் பெரிதாக மதித்ததால் தம்பதியிடையே மனஸ்தாபம் ஏற்படுகிறது. குமுதினி ஓர் ஆண்மகவைப் பெற்ற பின்னரேனும் இப்பிணக்குத் தீருகிறதா? இதைத்தான் ஆசிரியர் வாசகர்களின் மனோபாவத்துக்கு விட்டிருக்கிறார்.

**விலை ரூ. 1—8—0**

(தபாற் செலவு தனி)

---

மானேஜர்—கலைமகள்—மயிலாப்பூர்

# மாயா விநோதினி

உலக மகாகவி

**ஸ்ரீ ரவீந்திரநாத் டாகுர்**

எழுதிய உயர்தர நவீனம்

மஹேந்திரன் என்ற இளைஞன் விநோதினி என்ற பெண்ணை மணக்க மறுத்ததால் அவளை வேறு இடத்தில் விவாகம் செய்துகொடுக்கிறார்கள். ஆனால் துரதிர்ஷ்ட வசத்தால் அவள் விதவையாகி விடுகிறாள். பின்னர் மஹேந்திரன் ஆசா என்ற பெண்ணை மணக்கிறான். அவன் வரவரப் பெண்டாட்டிப் பித்துப் பிடித்து அலைவதையும், நாட்டுப்பெண் காரியம் செய்யத் திறமையற்று இருப்பதையும் கண்டு அவன் தாய் தன் ஊருக்குச் சென்று விதவையாகிய விநோதினியைத் தனக்கு உதவியாக இருக்கும்படி அழைத்து வருகிறாள். சஞ்சல ஸ்வபாவமுடைய அப்பெண்ணைக் கண்டதும் மஹேந்திரன் ஆசாமீது வெறுப்புற்று விநோதினியிடம் விருப்பம் கொள்கிறான். குடும்பகௌரவமே குலைந்துவிடும் நிலைக்கு வந்து விடுகிறது. அப்போது விநோதினி தன் மன உறுதியால் எல்லாவற்றையும் சமாளித்துப் பின் காசிக்குச் செல்கிறாள். இதில் இவ்விருவரின் அமைதியற்ற தன்மைக்கு எதிராக மஹேந்திரன் மனைவி, அவன் நண்பன் விஹாரி ஆகியவர்களுடைய சாந்த ஸ்வபாவத்தை வர்ணிக்கும் ஆசிரியரின் கற்பனைத்திறமை மிக உயர்ந்ததாகும்.

**விலை ரூ. 1—8—0**

(தபாற் செலவு தனி)

---

மானேஜர்—கலைமகள்—மயிலாப்பூர்

# பார்வதி

## 'சங்கரராம்'

எழுதிய உயர்ந்த நாவல்

கள்ளங்கபடற்ற வெள்ளை மனமுள்ள பார்வதி, அதே குணமுள்ள தன் ஓரகத்தி லக்ஷ்மியோடு வசிக்கிறாள். பார்வதியின் கணவன் விசுவமும் ராமகிருஷ்ணையரும் உண்மையான சகோதரர்கள். ஆற்று நீர்போல் தெள்ளத் தெளிய ஓடும் வாழ்க்கையின் நடுவே, விசுவம் பார்வதியைச் சந்தேகிக்கும்படியான சந்தர்ப்பங்கள் குவிகின்றன. சந்தேகப்பேயின் பெருவேட்கையைத் தணிக்க லக்ஷ்மி தன்னையே பலியிடுகிறாள். ஒரு பெண்மணி துணிகரமாக முயன்று, விசுவத்தின் மனத்தில் இருந்த மாசுமறுக்களை அகற்றியுதவுகிறாள். அநாவசியமான வர்ணனைகள் இன்றி, எளிய தெள்ளிய நடையில், உள்ளத்தை அள்ளும் வண்ணம் கதைப்போக்குச் செல்லுகிறது. இந்த நாவல், நவீன இலக்கியத்தில் ஒரு முக்கியமான ஸ்தானத்தை வகிக்கிறது.

**விலை ரூ. 2—8—0**

---

மானேஜர் - கலைமகள் - மயிலாப்பூர்

# புனர்ஜன்மம்

கு. ப. ராஜகோபாலன்

(1) புனர்ஜன்மம், (2) அர்ச்சனை ரூபாய், (3) மன்னிப்பு, (4) பார்வதியின் தவம், (5) கதைக்காரன் கர்வம், (6) என்ன தைரியம்? (7) சோகத்தின் முன்னிலையில், (8) ராஜத்தின் காதல், (9) நினைவுமுகம் மறக்கலாமோ? (10) பாப்பாவின் சங்கிலி, (11) பாட்டியின் ஆதங்கம், (12) காமுவின் கதை, (13) அடி மறந்தால் ஆழம், (14) குழந்தைகள் கொலு, (15) தனபாக்கியத்தின் தொழில், (16) மனக் கோட்டை, (17) யார்மேல் பிசகு? (18) 'மனம் வெளுக்க', (19) காதல் நிலை, (20) சந்திப்பு, (21) நடுத்தெரு நாகரிகம், (22) இரண்டாம் தலை தீபாவளி, (23) திரைக்குப் பின், (24) இயற்கையின் வெற்றி, (25) என்ன வேண்டும்? (26) தித்திப்பு.

மனித வாழ்க்கையில் காதல் ஒரு முக்கியமான சாகை. ஆசிரியர் அதைப் பல கோணங்களிலிருந்து பார்த்து, தாம் அநுபவித்த உண்மைகளையும் இயல்பான சம்பவங்களையும் ரஸமாக வர்ணிக்கிறார். "காதல் கரையற்றது, கட்டற்றது என்பது மட்டுமல்ல. வார்த்தையிலோ செயலிலோ அதற்கு ஒரு கரை ஏற்படக் கூடாது; நிர்ணயம் கூடாது." "காதலில் கால் பாவினால் வெள்ளம் வடிந்து போகும். காதல், மனத்தின் பெருக்கிலிருந்து செயலென்னும் மணல் தரைக்கு வந்தால் இருக்கிற இடம் தெரியாமல் வறண்டுவிடும். அது எப்போதும் உடல் சம்பந்தப்பட்ட மட்டில் தூரத்துப் பச்சையாகவே இருக்கவேண்டும். நெருங்கினால் அந்த மோகனக் கனவு கலைந்துவிடும். பரஸ்பர ஆலிங்கனத்தினால் இருவர் சேர்ந்து கட்டிப் பிடித்துக் கண்டுவிட முயலும் மாய அழகு தப்பி ஓடிவிடும். வெறும் உடல்கள்தாம் நிற்கும். பரஸ்பரம் உடனே ஏமாற்றமும் வெறுப்பும் தோன்றும்." - இவை போன்ற உண்மைகளைக் கதைச் சுவையோடு கூடவே அறிந்து ரஸிக்கலாம்.

விலை ரூ. 2/-

மானேஜர்—கலைமகள்—மயிலாப்பூர்